# செந்தமிழ்ச் செல்வி



உள்ளுறை




சிலம்பு-௫௭] வள்ளுவர் ஆண்டு-௨௦௧௪. வைகாசி. June'83 [பரல்-௧௦

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---



---


"செந்தமிழ்ச் செல்வி"

ஆண்டுக் கையொப்பம் :

உள்நாடு ரூ. 16 00 வெளிநாடு ரூ. 30 00

வாழ்நாள் கையொப்பம் :

உள்நாடு ரூ. 150 00 வெளிநாடு ரூ. 300 00

செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௭ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௪, வைகாசி சூன் 1983 | பரல் ௧௦ |
|---|---|---|

# சிறப்பொடு பூசனை

ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னர் வள்ளுவப் பெருந்தகை எடுத்துரைத்த வான் சிறப்பின் பெருமையை, குறளுக்குக் குறள் எழுத்தெண்ணிப் படித்துப் பொருள் காண வேண்டிய சூழ்நிலையில் நந் தமிழகம் இன்றுள்ளது. தொடர்ந்து ஒரு சில ஆண்டுகள் வான்பொய்த்த காரணத்தினால் தமிழகமெங்கும் குடிப்பதற்குக் கூடத் தண்ணீர் கிட்டாத அளவு மக்கள் பேரின்னலுக்குட்பட்டுள்ளனர். நீர்ப்பற்றாக் குறையின் காரணமாகக் கல்விக் கூடங்கள் உரிய காலததிற்கு முன்னரே மூடப்பட்டன. திறக்க வேண்டிய நாளையும் பின்னோக்கித் தள்ளிப் போட்டுள்ளது தமிழக அரசு. தமிழகத்தின் தலைநகராம் தருமமிகு சென்னை தன் மக்களின் குடிநீருக்காக அண்டை மாநிலத்தில் ஓடும் ஆற்றை நம்பி எதிர்காலத்திட்டமிட்டுள்ளது. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்குவதினின்றும் பொய்த்த மழை துப்பார்க்குத் துப்பாகும் நிலையினின்றும் பொய்த்துவிட்டது. ‘கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே எடுப்பதூஉம் எல்லாம் மழை’ என்று அம் மழையையே நாம் நம்பிக்கொண்டிருக்கிறோம்.

இத்தகைய ‘வறட்சி நிலை’ இன்று நமக்குப் புதிதன்று. 1975லேயே இந்நிலை இருந்தது. (அதுபற்றிய நமது கருத்தினைச் செந்தமிழ்ச் செல்வி சிலம்பு-௪௯ பரல்-௧௦, ௫௧௯ஆம் பக்கத்திற் காண்க) நாடு விடுதலை பெற்று 35 ஆண்டுகள் நிறைவுறப் போகும் இந் நிலையிலும் இத்தகைய அவல நிலைகட்கு மாற்றம் காணாமற்போனது வருந்தததக்கதே.

வான்புகழ் வள்ளுவர் ‘வான் சிறப்பு’ அதிகாரத்தில் முதல் இரண்டு குறள்களில் மழையின் சிறப்பையும் பயனையும் கூறிய பின் எட்டுக் குறள்களில் மழை இல்லாமற் போயின் இவ்வுலகு

எவ்வளவு இன்னலுறும் என்பதை விரிவாக வலியுறுத்திக் கூறி யுள்ளார்.

மழை பொய்க்குமாயின் பசி உயிர்களை வருத்தும். உழவர் உழமாட்டார், பசும்புல் தலைகாட்டாது; கடலும் வளம் குன்றும்; சிறப்பொடு பூசனை செல்லாது; தானம் தவம் இரண்டும் தங்கா; ஒழுக்கம் நிலைபெறுமற் போகும். வானம் பொய்த்தலால் ஏற்படும் விளைவுகளை வள்ளுவர் பெருந்தகையைப் போல் இவ்வளவு தெளிவாக வேறு எவராலும் எடுத்தியம்ப இயலாது.

தண்ணீர் இல்லையாயின் தனிமனித வாழ்க்கை மட்டுமன்றிக் குமுகாய வாழ்க்கையே சீர்குலைந்து போகுமென்பதைச் 'சிறப்பொடு பூசனை செல்லாது' என்ற சொற்றொடரால் குறிப்பிடுகின்றார் வள்ளுவர். ஈண்டு சிறப்பொடு பூசனை என்றது திருக்கோயில் களில நடைபெறும் திருவிழாக்களையும் நாள்வழிபாட்டையும் குறித்து நிற்கின்றது. இதனை இவ்வாண்டு நந் தமிழகத்தில் கண்கூடாகக் காண்கிறோம். மதுரை மாநகரில் ஆலவாய்ப் பெருமான் திருக்கோயிலில் ஆண்டுதோறும் சிறப்பாக நடை பெறும் 'சித்திரைத் திருவிழா' இவ்வாண்டு வானம் பொய்த்த தால் நடைபெறுமற் போகுமோ என்ற ஐயம் ஏற்பட்டது. ஆனால் அப்படிப்பட்ட சூழலில் தமிழக அரசு வைகையில் ஆற்று நீரை ஓரிரு நாட்களுக்குத் திறந்துவிட்டதனால் ஒருவாறு திருவிழா என்னும் சிறப்பினைக் கொண்டாட முடிந்தது. இல்லை யேல் சிறப்பு செல்லாமற் போயிருக்கும். பல ஊர்களில் திருக் கோயில்களில் பூசனையாகிய நாள்வழிபாடுகள் நீரின்மையால் நின்று போயின. நீர்ப்பற்றுக் குறையின் விளைவுகளை எடுத்துக் காட்ட எடுக்கப்பெற்ற திரைப்படமொன்றில் ஊர்க் கோயிலில் நீரில்லாமையால் நாள்வழிபாடு நின்றுபோனது என்ற விளக்க மும் காட்டப் பெற்றுள்ளது.

இனி, 'சிறப்பொடு பூசனை' என்ற சொற்றொடருக்கு ஏற்ற பொருள் யாது என்பதைக் காண்போம். இதற்குப் பலர் பலவாறுகப் பொருள் கண்டுள்ளனர். 'நைமித்திகம் எனும் விழவும் நித்தியம் எனும் பூசனையும்' என்றார் பரிமேலழகர். இதற்கு விளக்கம் கூற முற்பட்ட கோ. வடிவேலு செட்டியார் அவர்கள் "யாதானுமோர் நிமித்தம்பற்றிச் செய்யுங் கன்மம் நைமித்திகக் கன்மம் எனப்படும். அது கிரகண காலத்திற்செய்யும் சிரார்த்தம் சமுத்திர ஸ்நான முதலியனவாம். எப்போதும் செய்யுங் கன்மம் நித்திய கன்மமெனப்படும். அது ஸ்நானம், சந்தியாவந்தனம், தேவ பூஜை முதலியனவாம்", என்று வரைந் துள்ளார்.

இதற்கு, 'சிறப்பொடு கூடிய பூசனை' என்று பழைய உரைகாரர் முதல் திரு.வி.க. வரை உரைகண்டுள்ளனர். 'பூசை சிறப்புடன் நடைபெறாது' என்று கூறுவார் திரு.வி.க. அங்ஙனமாயின் எளிமையான அளவில் பூசை நடைபெறும் என்று பொருள் கொள்கிறார் எனக் கருதலாமன்றோ!

சட்டப் பேரறிஞர் கா. சு. பிள்ளை, டாக்டர் மு. வரதராசனார் போன்ற அறிஞர் பலர் திருவிழாவும் நாடோறுஞ் செய்யும் வழிபாடும் நடவா என்றே பொருள் கொள்கின்றனர். 'முதலிலே திருவிழா நின்று, பின்பு வழக்கப்பூசையும் நின்றுபோம்' என்கிறார் கா. சு. பிள்ளை.

சிறப்பு என்பதற்குத் திருவிழா என்றும், பூசனை என்பதற்கு 'நாள்வழிபாடு' என்றும் பொருள் கொள்வதே சிறப்புடைத்து என்கிறார், உரைவளம் கண்ட பேரறிஞர் ச. தண்டபாணி தேசிகர் அவர்கள். (திருக்குறள் உரைக்களஞ்சியம், பக்: ௧௨௪). இவ்வளவு எளியமுறையில் பொருள் கொள்வதை விடுத்து சிரார்த்தத்தையும், சந்தியாவந்தனத்தையும் இத்துடன் இணைப்பது பொருள் சிறப்புடையதாக இல்லை.

'கோயில்புக்கு நங்கைக்குச் சிறப்பயர்ந்த செங்குட்டுவர்க்கு' (சிலம்பு: ௨௯ உரைப்பாட்டு); 'சென்றுகை தொழுது சிறப்புச் செய்தலின்' (மணி ௧௦: ௭௨); 'தெய்வத்தைக் கரங்கொடு பெருஞ் சிறப்பு அயர்தல் மேயினான்' (சூளா: 212) என்ற தொடர்கள் முன்னரே 'சிறப்பு' என்பதற்குத் 'திருவிழா' என்ற குறிப்பை உணர்த்தியுள்ளன.

இலக்கிய வழக்கில் மட்டுமன்றி இன்றும் பேச்சுவழக்கில் இப் பொருள் உள்ளதை நாஞ்சில்நாட்டுத் தமிழ் காட்டுகிற தென்கிறார் பேராசிரியர் தி. அ. சொக்கலிங்கம். (விசிறி மடிப்பு. பக். 65) நாஞ்சில் நாட்டில் பேச்சுவழக்கில் பல அரிய சொற்கள் ஆளப்பெறுவதைச் சுட்டிக்காட்டுகையில், அவ்வேளை கோயில் பூசாரி பெரியவரைக் காணவருகின்றார். 'அடுத்த வாரம் கோவில்ல சிறப்பு நடத்தணும்' என்கிறார் பூசாரி. நித்திய வழிபாட்டைப் பூசை எனவும் சிறப்பாக நடத்தப்படும் திருவிழாவைச் 'சிறப்பு' எனவும் அழைக்கும் மரபு நாஞ்சில் நாட்டில் உண்டு என அறிகிறோம். 'சிறப்பொடு பூசனை செல்லாது என்ற வள்ளுவரின் சொற்றொடரில் நமது உள்ளம் தோய்கின்றது' என்று குறிப்பிட்டுள்ளார். எனவே, இலக்கியத்திலும் பேச்சுவழக்கிலும் உள்ள இப்பொருளைக் கொள்வதே சாலச் சிறப்புடையதெனக் கொள்ளலாம்.

———

# திருக்குறளும் கலைச்சொல்லாக்கமும்

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

(முன் பால் ௯௮௦ஆம் பக்கத் தொடர்ச்சி)

திருக்குறளில் அமைந்துள்ள சில தொடர்களில், இடையிடையே சில சொற்களை விடுத்து அமைத்துக்கொண்ட கலைச் சொற்கள் குறித்துச் சென்ற பாலில் கண்டோம். இப் பாலில், முழுதுறு கலைச் சொற்களாகவே வள்ளுவரால் அமைக்கப்பெற்றுள்ள சொற்கள் சிலவற்றைக் காணலாம்.

முற்பகல், பிற்பகல்

ஒரு நாளை இரவு, பகல் என இரண்டாகப் பகுத்து, அவற்றுள் பகலை முற்பகல், நண்பகல், பிற்பகல் என்பது நம்மவர் வழக்கமாக உள்ளது. பகல் என்றாலே நண்பகலைக் குறிக்கும் வழக்கமும் உண்டு. முற்பகல் பிற்பகல் என்பவை AM; PM என நாம் வழங்குவதற்கு மொழிபெயர்ப்புப் போலவும் அமைந்துள்ளது.

ஆங்கிலவர் ஆட்சியின் பின்னர் வந்து வழங்குவன Anti Meridian (A.M) Post Meridian (P.M) என்பன. இவை இலத்தீன் வழிச் சொற்களாம். இனி Fore noon, After noon என்பனவும் வழக்கில் உள்ள ஆங்கிலச் சொற்களே. இவ் விரு வகைச் சொற்களுக்கும் ஏற்பப் பண்டே படைத்து வைத்தாற் போல வழங்குபவை முற்பகல் பிற்பகல் என்பவையாம்.

> "பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
> பிற்பகல் தாமே வரும்"

என்பது வள்ளுவம். இவ் வள்ளுவச் சொல்லாட்சியில் உள்ளம் பறிகொடுத்த இளங்கோவடிகளார்,

> "முற்பகல் செய்தான் பிறன்கேடு தன்கேடு
> பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகாண்"

என்றார் (21 : 3-4).

பொருள்வைப் புழி :

கருவூலம் என்பது நிதியறை, பொக்கசம் என்பவற்றைக் குறிக்கும் கல்வெட்டுச் சொல். அச் சொல் Treasury என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு ஏற்ற கலைச் சொல்லாக விளங்கி வருகின்றது. Sub Treasury என்பதற்குச் சார்நிலைக் கருவூலம்

என்னும் ஆட்சியும் வழக்கில் உள்ளது. இக்காலத்தில் அரசுடைமை வங்கி, தனியார் வங்கி என இருதிற வங்கிகளும் கடமை புரிகின்றன. Bank என்பதை வள்ளலார் 'பங்கி' என்று ஆண்டுள்ளார். 'பாங்கு' என்று இந் நாளில் பலர் குறிக்கின்றனர். வங்கியில் பாதுகாப்புப் பெட்டக வாய்ப்பும் (Safety Locker) ஏற்பட்டுள்ளது. இவற்றை நோக்க Treasury என்பதற்குக் கருவூலம் என்னும் சொல்லைத் தேர்ந்துகொண்டதுபோல, Bank என்பதற்கு வள்ளுவர் வழியில் 'பொருள் வைப்புழி' என்பதனைக் கொள்ளலாம். இதனையே 'வைப்பகம்' எனச் சுருக்கிக்கொண்டால் ஆட்சிக்கு எளிமையும் இயல்புமாய் அமைந்துவிடும்.

''அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி''

என்பது வைப்புழி வைக்கப்பெற்ற இடமாகும்.

அருளாட்சி :

அருளாட்சியும் பொருளாட்சியும் திருக்குறளில் தங்காங்கு போற்றப்பெற்றுள்ளன. வாழ்வாங்கு வாழும் வாழ்க்கையை வகுக்கும் வள்ளுவப் பெருந்தகை, இவ் விரண்டையும் இணைத்துக் காட்டியும் இயம்புகிறார். அத்தகு குறள்களுள் ஒன்று,

''பொருளாட்சி போற்றாதார்க் கில்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்தின் பவர்க்கு''

என்பது.

இதில் வரும் 'அருளாட்சி' இக்காலத்தில் கலைச் சொல்லாகக் கிளர்ந்து விளங்குகின்றது. அருளாட்சிக் கழகம் என்றோர் அமைப்பும், அருளாட்சிக் கொடி என்றோர் கொடியும் திகழ்வதை நாடறியும். இவ் வருட் கொடை வள்ளுவ வழியில் வந்ததாம்.

தக்கார் :

திருக்கோயில் பணிகளைச் செவ்விதின் நடாத்துதற்குப் பண்டு தொட்டே அறங்காவலர் குழுக்கள் உண்டு. இக்காலக் குடியரசிலும் அம்முறை போற்றப்பெற்று வருதல் கண்கூடு. அறங்காவலர் குழு யாதேனும் ஒரு காரணியத்தால் கலைக்கப்படுமாயின் திருக்கோயிலாட்சியைக் கண்காணிப்பதற்குத் தக்கார் ஒருவரைத் தேர்ந்தெடுத்து அறங்காவல் பொறுப்பை அவர்மாட்டு வைப்பதுண்டு. அத் தகவாளர்க்குத் 'தக்கார்' எனப் பெயர் வழங்கப் பெறுகின்றது. இத் தக்கார் என்னும் கலைச் சொல் ''தக்கார் தகவிலர்'' எனவரும் குறள் வழியில் வாய்க்கப் பெற்றதேயாம். அன்றியும்,

''தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு'' (731)

என்றும்,

"தக்கார்க்கு ஒன்று ஈதல் வேண்டும்" (1006)

என்றும் தக்காரைச் சுட்டுவார் வள்ளுவர்.

**செல்வாக்கு :**

செல்வாக்கு என்னும் சொல்லாட்சி இக்காலத்தில் பெரு வழக்காக ஊன்றியுள்ளது. செல்வாக்கு இல்லாரும், சொல்வாக்கால் செல்வாக்காளராகத் திகழ்வதும் நாடறிந்தது. "செல்வமும் வாக்கும் சேர்ந்தால்தான் செல்வாக்கு உண்டாகும். வெறும் சொல்வாக்கு செல்வாக்கு ஆகிவிடுமா?" என்பாரும் உளர். செல்வாக்கு என்பது பிறர் செவிக்கண் புகுந்து செயலாண்மைப் படுத்தவல்ல வாக்கேயாகும். ஒருவர் ஓரிடத்துச் சொல்லும் வாக்கு, அதன் தகவாலும் சொல்வார் தகவாலும் உலகோரால் ஆணைச் சொல் போல ஏற்கப்படும் பெருமையடைவதே செல்வாக்காகும். செல்வாக்கை அதன் பொருள் வெளிப்பட விளங்குமாறு வள்ளுவர் பல்கால் வலியுறுத்துகிறார்; 'செலச் சொல்லல்' என்பது அவர் வழங்கும் கலைச் சொல். மேலும் செலச் சொல்லி (424, 686, 726) என்றும், செலச் சொல்வார் (719) என்றும் செலச் சொல்லாதார் (730) என்றும் குறிப்பிடுகிறார். செல்வாக்கு வந்த வகை இது.

**குறிவெதிர்ப்பு :**

ஒரு காலத்தில் பண்டமாற்று முறையே உலகமெலாம் இருந்தது. இப்பொழுது பணமாற்றும், தாள்மாற்றும் வழக்கில் உள்ளன. கைம்மாற்று, கைகண்ட வழிகளுள் ஒன்று. 'கடன் உடன்' வாங்குதல் என்பதில் 'உடன்' என்பது கைம்மாற்றாகும். வள்ளுவர் பண்டமாற்றுக் காலத்தில் வாழ்ந்தவர். அவர் 'குறிவெதிர்ப்பு' என்னும் ஒருதகைப் பண்டமாற்றைக் குறிப்பிடுகிறார்.

"வறியார்க்கொன் றீவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து"

என்பது அவர் வாக்கு.

குறியெதிர்ப்பு என்பது நாட்டுப்புற நடைமுறைச் செய்தியே. அது 'குறியாப்பு' என இன்றும் வழக்கில் உள்ளது. அண்டை விடு அடுத்த விடுகளில் தங்களுக்கு வேண்டும் உடனடித் தேவைக்காக அரிசி, உப்பு, எண்ணெய் முதலியவற்றை ஓர் அளவிட்டு வாங்கிக்கொள்வதும், அவ்வளவை மீண்டும் தந்து விடுவதும் குறியெதிர்ப்பு எனப் பெறுகிறது. குறிவாவது அளவிட்டுத் தரும் பொருள். எதிர்ப்பாவது மீண்டும் தருதல். இவ்விரண்டன் இயைபே குறியெதிர்ப்பாக வழங்குகின்றது. அருகிய இக் கலைச் சொல்லாட்சியைப் பெருக்கத் திற்குக் கொண்டு வரலாம்.

நெடுங்காலம் கழித்தும் தரும் குறியெதிர்ப்பு உண்டு என்பதை 'நெடுங்குறி யெதிர்ப்பை நல்கியோர்க்கும்' என்னும் பெருஞ்சித்திரனார் வாக்கால் (புறம். 163) அறியலாம். உயிரை மீட்டுத் தருதலின் அருமையை நினைந்து "உயிர்க்குறி எதிர்ப்பை பெறலருங் குரைத்தே" என்றார் மலையனார் (நற். 93).

"குறியெதிர்ப்பையாவது, அளவு குறித்து வாங்கி அவ்வாங்கிய வாறே எதிர் கொடுப்பது" என்னும் பரிமேலழகர் விளக்கம் எண்ணி இன்புறத் தக்கதாம். (திருக். 221)

**செம்பாகம் :**

செம்மை என்பது நேர்மை, நடுவு நிலைமை, சரிபாதி முதலிய பல பொருள் தரும் சொல்லாகும். திருவள்ளுவர் சரிபாதியைச் செம்பாகம் என வழங்குகிறார்.

> *"கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தில்*
> *செம்பாகம் அன்று பெரிது"* (1092)

என்பது அது. பகுக்கப்பெறுவது பாகம்; அதனைச் செவ்வையாகப் பகுப்பது செம்பாகம். எள்ளுக்காய் பிளந்தாற்போல என வழங்கும் உவமை செம்பாகத்தைக் குறிப்பதாம். சரிபாதியைச் செம்பாகமென ஆட்சிக்குக் கொண்டுவந்தால் சீரிய கலைச் சொல்லாகத் திகழும். (தொடரும்)

---

## வடமொழி ஏற்றதும், தமிழ்மொழி ஏற்காததும்

வடமொழி எதை நல்லது! சிறந்தது! உயர்ந்தது என்று கூறிக்கொண்டிருக்கிறதோ, அதைத் தமிழ் மொழி இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தே ஏற்கவில்லை என்பதை,

> *"அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்*
> *உயிர் செகுத்து உண்ணாமை நன்று"*

என்னும் குறள் இன்றும் கூறிக்கொண்டிருக்கிறது.

உயிர்களைக் கொன்று அவற்றின் ஊன் முதலியவைகளை வேள்வித் தீயிற்காட்டி, விண்ணவரை மகிழ்வித்து வேண்டியவைகளைப் பெறலாம் என்பது வேதங்களின் கருத்து. அவ்விதமாயின் புலாலுண்ணும் தேவர்களைவிட உண்ணாதிருக்கும் மக்கள் நல்லவர்கள் என்பது இக் குறளின் கருத்து.

முத்தமிழ்க்காவலர்
கி. ஆ. பெ. விசுவநாதம்

# செந்தலை அன்றில்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எஸ்.]

"நெருப்பி னன்ன செந்தலை யன்றில்
இறவி னன்ன கொடுவாய்ப் பெடையொடு
தடவி னோங்குசினைக் கட்சியிற் பிரிந்தோர்
கையற நரலு நள்ளென் யாமத்துப்
பெருந்தண் வாடையும் வாரார்
இஃதோ தோழிநங் காதலர் வரைவே" —குறுந்தொகை-160

சங்க நூல்களில் குறுந்தொகையில் வரும் ஒரு பாட்டில் மட்டும் நெருப்பு போன்ற செந்தலையையுடைய அன்றில் கூறப் பட்டுள்ளதைக் கவனிக்க வேண்டும். இதையொட்டியே 'பூந்தலை யன்றில்' என்று ஐந்திணை ஐம்பது (41) கூறியுள்ளது. 'எரிய கைத் தன்ன செந்தலை யன்றில்' (தொல். களவு-21. நச். மேற்) என்னெரு பாடல் வரியை நச்சினர்க்கினியர் மேற்கோளாகக் காட்டியுள்ளார். அன்றில் என்ற பறவை வக்காவாக இருக்க லாம் (nigdt heron) என்று முனைவர் உ. வே. சாமிநாதையர் எழுதினர். தமிழிலக்கியத்தில் கூறப்பட்டுள்ள அன்றில்பற்றிய செய்திகள் வக்காவுக்குப் பொருத்தமாக உள்ளன. ஆனால் வக்கா என்ற பறவையில் ஒன்று உயிரிழந்தால் (ஆணோ, பெண்ணோ) அதன் துணையான மற்றொன்று இறந்துவிடும் என்று கருதியமை உண்மையான செய்தியில்லை. 'ஒன்றில் காலை அன்றில் வாழாது' என்று கூறுவது இயற்கையில் வக்காவுக்குப் பொருத்தமற்றது. ஆனால் ஒன்று உயிரிழந்தால் மற்றொன்று வாழாமல் உயிர்விடும் தன்மை உண்மையாகவே சாரசம் (Saruscrane) என்று அழைக்கப்படும் பறவைக்கு உள்ளது. இப் பறவை 3 அல்லது 4 அடி உயரமாகக் காணப்படும். தலை சிவப்பாக இருக்கும். இப் பறவைதான் செந்தலை அன்றில் என்று கருத இடமுண்டு. ஏனெனில் இந்த சாரசப் பறவை மட்டும்தான் இயற்கையில் ஒன்று இறந்தால் மற்றொன்று உயிர் வாழாத தன்மையுடையது என்பதைப் பறவை நூல் அறிஞர்கள் கூர்ந்து கவனித்து எழுதியுள்ளனர். "Sarus pair for life, the faithfulness and devotion of the couple to each other have become legendary in India and popular sentiment is responsible for the universal protection which the bird enjoys". வடமொழி இலக்கியத்தில் பறவைகளில் ஒன்று இறந் தால் மற்றொன்று இறந்துவிடும் என்று இருவகைப் பறவை களுக்குக் கூறப்பட்டுள்ளது. சாரசம், சக்கரவாகம் என்ற

இரண்டு பறவை வகைகளுள், ஒன்று இறந்தால் மற்றொன்று இறந்துவிடும் என்று சொல்லப்பட்டுள்ளது. சக்கரவாகப் பறவைக்கு ஒன்று இறந்தால் மற்றொன்று இறந்துவிடும் தன்மை கிடையாது. சக்கரவாகப் பறவையை நிகண்டுகள் கோகம் என்று கூறுகின்றன. சாரசப் பறவையைத் தமிழ்நாட்டில் காண முடியாது. பறவைநூல் அறிஞர்கள் கண்டபடி வட நாட்டில் இப் பறவை மிகுதியாகக் காணப்படுகிறது.

செந்தலை அன்றில் தடா மரத்தில் கூடு கட்டியிருந்ததைப் பற்றியும் மேற்சொன்ன இந்தக் குறுந்தொகைப் பாடல் கூறி யுள்ளது. சங்க நூல்களில் இந்த ஒரே பாட்டில் மட்டும் தான் தடாமரம் கூறப்பட்டுள்ளது. தமிழ்நாட்டில் தடாமரம் அரிதாகவே இருந்தது. ''தடா என்பது ஒரு மரம்; இதன் இலையைத் தைத்து உண்கலமாகக் கொள்ளும் வழக்கு காளத்தி முதலிய இடங்களிற் காணப்படுகிறது'' என்று முனைவர் உ. வே. சாமிநாதையர் கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். தடாமரம் ஆந்திராவில் மிகுதியாகக் காணப்படுகின்றது. தலைவியை விட்டுப் பிரிந்த தலைவன் வாடை வந்தும் வரவில்லையே என்று தலைவி புலம்புகின்றாள். தடாமரத்தைக் குறிப்பாகக் கூறுவதால் தலைவன் ஆந்திர நாட்டிற்குச் சென்றிருக்கலாம் என்று தோன்றுகின்றது. அங்கு ஆந்திர நாட்டில் கண்ட செந்தலை அன்றிலைப்பற்றியே தலைவி கூறுகிறாள் என்று கருதலாம்.

பரிபாடல் 5ஆம் பாட்டில் காணப்படும் குருகுபற்றிய வரிகளை ஆராய்ந்தால் அதில் கூறப்பட்டுள்ள 'குருகு' என்ற பறவை அன்றிலே என்பதை உரை விளக்கத்தால் உணரலாம். 'நாவலந் தீவினுள், வடகூற்றில் கௌஞ்சமென்றும் மால்வரையைத் துளைத்து அதன் வழிப்படுத்தின ஆறு மென்றலையுடையாய' என்றும் கூறப்பட்டுள்ளது. குருகு என்றது அன்றில் 'அதற்கு வடமொழிப் பெயர் அதுவாதலின் குருகொடு பெயர் பெற்ற மால்வரை என்றார்' என்று பரிமேலழகர் உரை கூறியுள்ளார். பரிபாடலில் கூறப்பட்டிருக்கும் கௌஞ்சப் பறவையைக் குருகு என்று கூறியிருப்பதுவும், வடகூற்றில் காணப்பட்டது என்பது வும் அதுவேதான் கவுஞ்சம் (கிரௌஞ்சம்) என்று அழைக்கப் பட்டதுவுமான செய்திகளை ஆராய்ந்தால் அன்றில் என்பது செந்தலையுடைய சாரசப் பறவையாகவே இருக்க முடியும். ஒரு வேட்டுவன் ஒரு கிரௌஞ்சப் பறவையைக் கொன்றதும் மற்றொரு கிரௌஞ்சப் பறவை இறந்துவிட்டதைப் பார்த்து வால்மீகி வடமொழியில் இராமாயணம் எழுதினார் என்று கூறுவர்.

இந்த கிரௌஞ்சம் என்ற பறவை சாரசமே என்று வடநூல்களி லிருந்து தெரிகின்றது. கௌஞ்சம் என்பது பாகத சிதை வாகும். இதுகாறும் கூறியவற்றிலிருந்து செந்தலை அன்றில் என்று கூறிய பறவை கிரௌஞ்சம் என்று வடமொழியில் சொல்லப்பட்ட பறவையே. குறுந்தொகை கூறும் செந்தலை அன்றிலே உண்மையான அன்றிலாகும்.

தமிழகத்திலுள்ள வக்காவை அன்றில் என்று சங்ககாலத் தில் கருதியது வியப்புக்குரியதாகும். அன்றிலை வக்காவுடன் பிணைத்துப் பல பாடல்களில் பாடியுள்ளது புதிராக உள்ளது. இந்த வக்காவிற்குத் தலை சிவப்பாக இராது. கருப்பாகவே இருக்கும். இந்தப் பறவை பனைமரத்தில் கூடுகட்டும் வழக்க முடையது. இது இன்றும் உண்மையாகவுள்ளது. (Another useful bird in the night heron found nesting on palmyra and other tall trees. It has a black head with a crest on it—Rural science) செந்தலை அன்றில் என்று கூறிபது கோதா வரிக்கு அப்பால் சென்று சாரசத்தைக் கண்டு 'ஒன்றில் காலை அன்றில்' என்பதைத் தெரிந்துகொண்டு அத் தன்மையைத் தமிழ்நாட்டில் வாழும் வக்காவுக்கு இணைத்தனர் என்று கருத லாம். இல்லையேல் திராவிடர்கள் தென்னாட்டிற்கு வந்தபோது வடநாட்டில் கண்ட சாரசப் பறவையின் குணத்தை வக்காவின் மேல் கற்பனையாக ஏற்றினர் என்றும் கருதலாம். இதுவே உண்மையாகவும் இருக்கலாம். தமிழ்நாட்டில் சிவந்த தலையை யுடைய பறவையே கிடையாது என்பதைப் பறவைநூல் படித் தோர் அறிவர். வக்கா என்ற நீர்ப்பறவை மாலை இருளில் கூட்டைவிட்டு வெளியேறும். ஆண், பெண் பறவைகள் இரைக்காகச் செல்லும்போது ஒன்றையொன்று அழைத்துக் கொண்டே இருக்கும். இச் செய்தியை வைத்தே செந்தலை சாரசத்திற்குரிய உண்மைச் செய்தியை வக்காவிற்குக் கற்பனை யாகக் கூறியிருப்பார்கள் என்று நினைக்க இடமுண்டு. குறுந் தொகையில் கூறப்பட்ட செந்தலை அன்றில் கோதாவரி ஆறு வரை காணப்படும் சாரச நாரையேயாகும். இன்று மக்களிடையே சாரசம் என்று வழங்கும் பறவை வடமொழி இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள கிரௌஞ்சமேயாகும். இப் பறவையை ஆங்கி லத்தில் saruscrane என்றழைப்பர். அறிவியலில் Grus antigone (Linnaeus) என்றழைப்பர்.

———

# புணரியல்

## (இயல் விளக்கம்)

[திருமங்கலம் வை. தங்கமணி]

தொல்காப்பியர் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என முப்பெரும் பிரிவுகளும், பிரிவுகளுக்கு ஒன்பது இயல்களும் அமைத்து முன்னோர் மரபு நிலை பிழையாமல் தம் எண்ணத்தை அதனோடு இணைத்து வடித்துக் காட்டுகிறார் தொல்காப்பியத்தில்.

அத்தகு தொல்காப்பியத்தில் முதற்கண் நிற்கும் எழுத்ததிகாரத்தில் நான்காவது நிற்பது 'புணரியல்'. அதன் பின்னால் 'தொகை மரபு' என்றும், 'உருபியல்' என்றும், உயிர் மயங்கியல்' என்றும், 'புள்ளி மயங்கியல்' என்றும், 'குற்றியல் உகரப் புணரியல்' என்றும், தனித்தனி இயல்பாகப் பிரித்துப் புணர் இலக்கணம் கூறும்போது அவை அனைத்திற்கும் முன்னால் 'புணரியல்' என்று ஓர் இயல் தேவைதானா? தேவைதான் என்றால் இவ்வியல் இயம்புவது என்ன?

உரையாசிரியராகிய இளம்பூரணர் 'மொழிகள் புணர்தற்குரிய கருவியின் இயல்பு கூறினமையின் 'புணரியல்' எனப்பட்டது, என்றும்,

'மொழி மரபில்' கூறிய மொழிகளைப் பொதுவகையாற் புணர்க்கும் முறைமை உணர்த்தினமையின், 'புணரியல்' என்று இவ்வோத்திற்குப் பெயராயிற்று', என்று நச்சினார்க்கினியரும் கூறுவர்.

'புணர்ச்சியை விடச் சொற்புணர்ச்சியின் சூழல்களையும், அச்சொற்களின் தன்மைகளையும், ஒலிநிலைகளையுமே அதிகமாகப் பேசுவதால் 'புணரியல்' என்று கூறாது 'புணர் மொழியியல்' என்பதே சால்புடைத்து, ஏற்புடைத்து' என்று கூறி, காப்பியர் சொன்ன 'புணரியல்' என்ற இயலையே உடைத்துக் காட்டுவோரும் உண்டு.

நிறுத்தசொல் குறித்துவரு கிளவியின் புணரும் இயல்பு உணர்த்துதலான் 'புணரியல்' ஆவதன்றி மொழிகள் இன்னின்னவாறுதான் புணரவேண்டும் என்ற புணர்தற்குரிய கருவியாம் இயல்பு கூறுதல் இன்மையானும்;

தனிமொழிக்கண் நிற்கும் எழுத்துகளின் இயல்பையும், எழுத்துகள் தனிமொழிக்கண் நிற்குமாறுபற்றி உணர்த்துதலன்றி மொழிகளை உணர்த்துதல் இன்றாகலானும்,

நன்னோக்கிற்குச் சென்று நூலாசிரியர் உணர்வை எண்ணத்தை உணராது உடைத்துக்காட்டிப் புதுநெறி காணுதல் செவ்விதன்று; ஆகையால், ஆசிரியர் வழிச் சென்று விடை காண்பதே செந்நெறியாம் என நினைந்து அவர் பின்னே இயலுள் புகுவோம்.

புகுந்தால் நாம் காண்பவை :

௧. உயிர்முன் உயிரும், உயிர்முன் மெய்யும், மெய்முன் மெய்யும், மெய்முன் உயிரும் நிற்பது குறித்துவரு கிளவி நிறுத்த சொல்லொடு பொருள் பொருத்தமுறப் புணர்ப்பது புணர்ச்சி என்றும்,

௨. அவ்வாறு பெயரொடு பெயரும், பெயரொடு வினையும், வினையொடு வினையும், வினையொடு பெயரும் எனவரும் நிறுத்த சொல்லும்—குறித்துவரு கிளவியுமாகப் புணர்க்கும்போது இயல்பு புணர்ச்சி ஒன்று என்றும் மெய்பிறிதாதல், மிகுதல், குன்றல் எனத் திரிபு மூன்று என்றும்—

௩. இவ்வாறு புணர்ச்சியின் இலக்கணமும், புணர்மொழியின் இயல்பும் கூறியவர்—'பதினுயிரத்தொன்று', 'பன்னிரண்டு கண்' என்பன போன்ற அடைமொழியும் புணர்ச்சிக்குரிய என்றும்,

௪. புறநகர், முன்றில் என்பன போன்ற மரூஉ மொழியும் புணர்ச்சிக்கு உரிய என்றும்,

௫. அனைத்தும்; வேற்றுமைப் புணர்ச்சி, அல்வழிப் புணர்ச்சி ஆகிய இரண்டினுள் அடக்கி, அவைகள் எழுத்துமிகுதலும், சாரியை மிகுதலும் எழுத்தும் சாரியையும் மிகுதலும் உண்டென்றும்,

௬. உயர்திணை, அஃறிணை என்ற பெயர்நிலைச் சுட்டின் ஈற்றில் ஐ ஒடு கு இன் அது கண் என்னும் வேற்றுமை உருபுகள் வந்தாலும் புணர்ச்சிக்கு உரிய என்றும்—

௭. 'இன்னே வற்றே அத்தே அம்மே
ஒன்னே ஆனே அக்கே இக்கே
அன்னென் கிளவி உளப்படப் பிறவும்.'

பிறவும் தோன்றி முதல் கெட்டும், ஈறு திரிந்தும் நின்றாலும் புணர்ச்சிக்கு உரியவையே என்றும்—

௮. அகரம், ஆகாரம் என்பன போன்ற எழுத்துச் சாரியைகளும் புணர்ச்சிக்கு உரிய என்றும்—

௯. ஓசை வேற்றுமையால் பொருள் வேறுபடும் சொற்களும் புணர்ச்சிக்கு உரிய என்றும்—புணரியல் இயல் நிலையை விளக்கிக் காட்டுவார்.

ஆகையால் பின்னர்க் கூறப்படும் தொகை மரபு, உருபியல், உயிர் மயங்கியல், புள்ளி மயங்கியல், குற்றியல் உகரப் புணரியல் ஆகிய இயல்களுக்கு இஃது :

'நகருக்கு நுழைவாயில் போலவும்'—
'நூலுக்கு முன்னுரை போலவும்'—

அமைக்கப்பட்டுள்ளது எனலாம். எவ்வாறு :

நகரத்தின் எழில் காண வந்திறங்கும் பார்வையாளர்களுக்கு நகரத்தின் நுழைவாயிலிலேயே, காண வேண்டிய இடங்கள், அவைகளுக்குப் போகும் வழி, போய் வர வசதி ஆகியவை வரைபடத்தின் மூலம் விளக்கம் தரப்பட்டிருத்தல் போலவும்—

நூலின் தன்மை, சிறப்பு, உயர்வு ஆகியவைபற்றிய குறிப்புகள் அனைத்தும் முகவுரையிலேயே தரப்பட்டிருத்தல் போலவும்—

பின்னால் தரப்படும் தொகை மரபு முதல்—குற்றியல் உகரப் புணரியல் ஈறாகக் கூறப்பட்டுள்ள புணர்நிலையை அறிந்து உணர்ந்து கொள்ள—

திருத்த சொல் குறித்துவரு கிளவியின் ஈற்றுநிலை—முதல் நிலை—வினையா? பெயரா? அடை சேர்ந்து உள்ளதா? மரூஉ மொழியா? உருபு ஒட்டியுள்ளதா? ஏன் தோன்றியது—எப்படித் தோன்றியது என்று கேட்க முடியாவிட்டாலும் பொருள் நிலைக்கு உதவும் உருபு தோன்றியுள்ளதா? உயர்திணையா? அஃறிணையா? வேற்றுமையா? அல்வழியா? எதில் அடங்கும் என்பன போன்றவைகளை அறிந்து, அவைகளின் துணைகொண்டு தொகை, உருபு, உயிர், புள்ளி, குற்றியல் உகரம் என்றெல்லாம் இனங்கண்டு, அதனது தன்மையை அறிந்துகொள்ளத் துணை நிற்பதே 'புணரியல்' ஆகும் எனலாம்.

---

## இதையாவது செய்யுங்கள்

சமுதாயமும் அரசாங்கமும் ஆடம்பரமான விழாக்கள், ஆடம்பரமான திருமணம், விருந்து முதலியவற்றைத் தடுத்து நிறுத்த முடியாவிட்டாலும், அவற்றை நடத்துவோரைப் பாராட்டிப் போற்றாமல் ஒதுக்குவது நமக்கே கடமையாகும்.

—டாக்டர் மு. வரதராசனார்.

# கங்கைகொண்ட சோழீச்சுரத்து ஒன்பான் கோள்கள்

[தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம், விசாரத்,
கூட்டுறவு சங்கங்களின் இணைப்பதிவாளர் (ஓய்வு), பொள்ளாச்சி]

மனிதவாழ்வில் இன்னல்களும், இடையூறுகளும், இடர்ப்பாடுகளும் ஏற்படுதல் இயற்கை. குறை உளது எனக் குறை கூறு மனிதன் இல்லை என்றே கூறலாம். "கூழுக்கு உப்பு இல்லை" என்பானுக்கும் குறைதான். "பாலுக்குச் சர்க்கரை இல்லை" என்பானுக்கும் குறைதான். வாழ்வின் வேறு வேறு நிலைகளில் இருப்பினும், குறைகளின் தன்மை வேறுபட்டிருப்பினும், குறை என்ற நோக்கில் எல்லாம் ஒன்றுதான். தன் இன்னல் என்று துடைக்கப்படும்; தனக்குற்ற இடர்ப்பாடு என்று நீங்கும்; குறை என்று நிறைவுபெறும்; என்று தன் வாழ்வு வளம்பெறும் என்று அறிவதில் மனிதன் நாட்டம் மிகக் கொண்டவனாய், தன்னைப் பொறுத்தவரையில் கோள்களின் நிலையைச் சோதிட வல்லுநரைக்கொண்டு அறிய முற்படுகிறான். கோள்களின் நிலையில் என்று மாறுதல் ஏற்பட்டு, தன் வாழ்வு மலர்ச்சி அடையும் என்பதை அறிய அவாவுகின்றான். தேவைப்படின், குறிப்பிட்ட கோள்களுக்குச் சிறப்பு வழிபாடு செய்கிறான். கோயில்களில் உள்ள ஒன்பான் கோள்களை மூன்று அல்லது ஒன்பது முறை வலம் வருகின்றான்.

மதுரையம்பதி செல்ல விழைந்த திருஞானசம்பந்தப் பெருமானைத் திருநாவுக்கரசுபெருமான் "உறுகோளுந்தானுந் தீய" (கோள்களின் நிலையும் தீயபயப்பதாக உள்ளது) என்று மதுரை செல்வதினின்றும் தடுக்க முயல்கிறார். அதுபோழ்து சம்பந்தப்பெருமான்,

"வேயுறு தோளிபங்கன் விடமுண்டகண்டன்
மிகநல்ல வீணைதடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்து
என் உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனிபாம்பு இரண்டும் உடனே
ஆசறு நல்லநல்ல அவை நல்லநல்ல அடியார்
அவர்க்கு மிகவே"

என்ற திருப்பதிகத்தைப் பாடுகிறார். அஃதாவது இறையருள் காரணமாக ஒன்பான் கோள்களும் தீமையை நீக்கி, அன்பர்களுக்கு மிக்க நன்மையைப் பயக்கும் என்பதாம். இத் திருப்பதிகத்தின் திருக்கடைக்காப்புப் பாடலில் "உறு கோளும், நாளும்

அடியாரை வந்து நலியாத வண்ணம் உரை" செய்ததாக அருளியுள்ளார்.

> "நாள் என்செயும் வினை தான் என்செயும்
>     எனை நாடிவந்த
> கோள் என்செயுங் கொடுங்கூற்று என்செயுங்
>     குமரேசர் இரு
> தாளும் சிலம்புஞ் சதங்கையுந்
>     தண்டையுஞ் சண்முகந்
> தோளுங் கடம்பும் எனக்குமுன்
>     னேவந்து தோன்றிடினே"

என்ற அருணகிரிநாதர் திருவாக்கும் இதே கருத்தை வலியுறுத்துகிறது.

மனிதனை ஆட்டிப்படைப்பதாகக் கருதப்படும் ஒன்பான் கோள்கள் சிவன், சக்தி, முருகன் ஆகியோரின் கோயில்களில் தனியாகக் காணப்படும். இவை தம்முள் ஒன்று ஒன்றை நோக்காது வேறு வேறு திசையினைப் பார்க்குமாறு அமைக்கப் பட்டிருக்கும். இம் மரபினின்று மாறுபட்டவையும் உண்டு. எடுத்துக்காட்டாக நாகப்பட்டினம் காரோணர் கோயிலில் ஒன்பான் கோள்களும் ஒரே வரிசையில் மேற்கு நோக்கி இருக்கின்றன. வைத்தீசுவரன் கோயிலில் ஞாயிற்றிற்கும் செவ்வாய்க்கும் தனித்தனி திருமுன்புகள் உள்ளன. மற்ற ஏழு கோள்களும் வேறு வேறு திசைகளை நோக்கியவாறு இல்லாது வரிசையாக நின்றுகொண்டிருக்கக் காணலாம். முற்காலக் கோயில்களில் சனிக் கோள்மட்டும் வைத்து வணங்கப்பட்டது. ஏனைய கோள்கள் அமைக்கப்படுவதில்லை. உலகப் புகழ்பெற்ற தஞ்சாவூர்ப் பெரிய கோயிலிலும், திருநெல்வேலி மாவட்டத் திலுள்ள திருவாலீசுவரர் கோயிலிலும் இதற்குச் சான்றுகள் உள்ளன. ஒன்பான் கோள்களுக்கும் ஒவ்வொன்றிற்கும் தனித் தனி சிலை அமைக்கும் மரபினின்றும் மாறுபட்டுக் கங்கை கொண்ட சோழீச்சுரம் விளங்குகிறது. அங்கு ஒன்பான் கோள்களும் ஒரே கல்லில் அமைக்கப்பட்டுள்ளன. இது குறிப்பிடத்தக்கது.

இந்திய நாட்டில் நீண்டகாலம் பேரரசாக விளங்கிய சோழப் பேரரசின் ஆட்சிக்காலம்தான் தமிழகத்தின் பொற்காலம். உலக வரலாற்றில் மாமன்னர் எனப் புகழப்பெறும் ஒரு சிலரில் ஒருவன் முதல் இராசராச சோழன். இவன் சோழப் பேரரசர் களில் தலைசிறந்தவன். தந்தைக்குத் தக்க மைந்தனாக வாய்த் தவன் கங்கையும் கடாரமுங்கொண்ட முதல் இராசேந்திர சோழன்.

> "வெறிமலர் தீர்த்தத்து எறிபுனல்கங்கை
> மாப்பொரு தண்டாற் கொண்ட"

வெற்றியின் நினைவாகக் கங்கை கொண்ட சோழபுரம் என்ற நகரை அமைத்தான். அந்நகர் அற்றை நாளில் ஆசியா கண்டத்தின் மாபெரும் வல்லரசின் தலைநகரமாக இலங்கியது. அங்கு அப் பேரரசனால் கட்டப்பெற்ற கங்கை கொண்ட சோழீச்சுரம் என்ற கோயில் பெண்மையின் நளினத்துடன் மிளிர்வதாகச் சிற்பக்கலை வல்லுநர் திரு. பெர்சி பிரவுன் விதந்து கூறியுள்ளார்.

முற்காலச் சோழர்களின் கலைப்பாணியின் சிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ்கின்ற நான்கு கோயில்களில் ஒன்றான கங்கை கொண்ட சோழீச்சரத்தின் மகா மண்டபத்தின் வடகிழக்கு மூலையில் சதுரமான கல்லில் அமைக்கப்பட்டு ஒன்பான் கோள்கள் காணப்படுகின்றன. இது இராசேந்திர சோழனால், தான் வடநாட்டின் மீது கொண்ட வெற்றியின் நினைவாகக் கொணரப் பட்டது என்று சொல்லப்படுகிறது. இது சாளுக்கியர் கலைப் பாணியில் அமைந்துள்ளதாகவும் கூறப்படுகிறது. வடநாட்டுப் படையெடுப்பிற்குப்பின் வடபுலம், தென்புலம் ஆகிய இருவேறு பகுதிகளின் சிற்பநுட்பங்களை ஒருங்கிணைத்து முதல் இராசேந்திர சோழனால் செய்யப்பெற்றது இது என்ற ஒரு கருத்தும் நிலவுகிறது.

ஆகம நூல் ஞாயிற்றைத் தாமரை இருக்கையாக வழிபாடு செய்யலாம் என்று குறிப்பிட்டுள்ளது. இது மலர்ந்த தாமரைப் பூப்போன்று அமைந்துள்ளமையால் சௌரபீடம்—அஃதாவது ஞாயிற்றின் இருக்கை எனப்படுகிறது. இது இரு தட்டுகள் கொண்ட சதுர அமைப்பினைக் கொண்டது. மேல் தட்டில் எட்டு மூலைகளிலும் எட்டுக் கடவுளர் திருவுருவங்கள் காணப் படுகின்றன. அவை ஒன்பான் கோள்களில் எட்டுக் கோள் களாகவும் நடுவில் உள்ள தாமரைப்பூ ஞாயிற்றைக் குறிப்ப தாகவும் சொல்லப்படுகிறது. கீழ்த்தட்டு இருபுறமும் சக்கரங் களுடன் தேர்போன்று உள்ளது. அத் தேரினைக் குதிரைகள் இழுப்பது போன்றும் காணப்படுகிறது. கதிரவனின் தேரோட்டி யான அருணன் தேரில் உள்ள குதிரைகளை ஓட்டுவதுபோன்று அமர்ந்து உள்ளான். ஏழு குதிரைகள் ஏழு நாள்களையும், தேர்ச் சக்கரங்களில் உள்ள பன்னிரண்டு ஆரங்கள் பன்னிரண்டு மாதங்களையும் காட்டுவதாகக் கருதுகின்றனர். மூலைகளில் கையில் மாலையுடன் கந்தர்வர்கள் (வானவர்களில் ஒரு பிரிவினர்) பறக்கும் நிலையில் காணப்படுகின்றனர்.

ஒரே கல்லில் கோள்கள் ஒன்பதையும் கொண்ட இத்தகைய அமைப்பு வேறு எங்கும் காண்டற்கரிய ஒரு சிறப்புமிக்க படைப்பாகப் போற்றப்படுகிறது.

———

# சுந்தரர் செந்தமிழ்

[டாக்டர் சோ. ந. கந்தசாமி, இந்தியத்துறை,
மலாயா பல்கலைக்கழகம், கோலாலம்பூர்]

முன்னுரை

நால்வர் சென்ற வழியில் நாம் நடக்கவேண்டுமென நாட்டு மக்கள் நவில்வதை நாளும் நாம் செவிமடுக்கின்றோம். இந் நால்வர் சைவ சமய குரவர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய அருளாளர்களே ஆவர். இவர்கள் தோன்றவில்லையேல் சைவ சமயம் தழைப்பதற்கு வழி இல்லை. திருநெறிய தெய்வத் தமிழ் மலர்வதற்கும் வாய்ப்பில்லை. நம் சமயத்தையும் மொழியையும் இருவிழிகளெனக் காத்த சிறப்புக்குரியவர் இவர்களே ஆவர்.

நால்வருள் சம்பந்தரும் சுந்தரரும் இல்லறத்தவர். அப்பரும் மாணிக்கவாசகரும் துறவறத்தவர். இவர்தம் செப்புச் சிலைகளை நோக்கினும் இவ் வுண்மை புலனாகும். முன்னிருவர்க்கும் முடியுண்டு; பின்னிருவர்க்கும் முடியில்லை. இல்லறம் துறவறம் ஆகிய இருவகை அறங்களையும் தமிழ்மறை ஆகிய திருக்குறள் ஒப்ப மதித்தல் காணலாம். இவ் விருவகை வாழ்க்கையும் இறையின்பம் பெறுதற்கு உறுதுணை என்பதை நால்வர் வாழ்வியலும் நமக்கு உணர்த்தும் உண்மையாகும். இறைவனை உணர்தற்குரிய மார்க்கங்கள் நான்காகும். இறைவனைத் தந்தையாகவும் தன்னைப் புதல்வனாகவும் கருதி வழிபட்டவர் சம்பந்தர். இவர் நெறியினை மகன்மை நெறி அல்லது சற்புத்திரமார்க்கம் என்பர். இறைவனைத் தலைவனாகவும் தன்னைத் தொண்டனாகவும் எண்ணி ஏத்தியவர் அப்பர். இவர் நெறியினைத் தொண்டுநெறி அல்லது தாசமார்க்கம் என்பர். இறைவனைத் தம் தோழனாகக் கொண்டு போற்றியவர் சுந்தரர். இவர் நெறியினைத் தோழமை நெறி அல்லது சகமார்க்கம் என்பர். இறைவனைக் குருமணியாகவும் தம்மை மாணவனாகவும் மதித்து வணங்கியவர் மாணிக்கவாசகர். இவர் நெறியினை நன்னெறி அல்லது சன்மார்க்கம் என்பர். இவர்கள் நடந்து காட்டிய நால்வகை நெறிகளும் சென்று சேரும் இடம் ஒன்றே என்பதைத் தில்லைக் கூத்தனைக் காண்பதற்கு இவர்கள் வந்த வரலாறும் உணர்த்துகின்றது. மேலைக் கோபுர வாயிலாக அப்பரும் கீழைக் கோபுர வாயிலாக மாணிக்கவாசகரும் தென் கோபுர வாயிலாகச் சம்பந்தரும் வடகோபுர வாயிலாகச் சுந்தரரும் நடராசப் பெருமானைக் காண வந்தனர். நான்கு

வழியாக வரினும் முடிவில் சேரும் இடம் ஒன்றே என்ற உண்மை உணரத்தக்கது.

நால்வரும் அருளிச் செய்த பாசுரங்கள் தெய்வத் தமிழ் மறையாகத் திகழ்கின்றன. சம்பந்தர் பாடியவை 'திருக்கடைக் காப்பு' என்றும் அப்பர் அருளியவை 'தேவாரம்' என்றும், சுந்தரர் மொழிந்தவை 'திருப்பாட்டு' என்றும், வாதவூரர் வழங்கியவை 'திருவாசகம்' என்றும் சிறப்புப் பெயர் பெறுகின்றன.

அருளாளர் பார்வையில்

சைவசமய குரவர் நால்வரிலும் சுந்தரர் சிறப்பாகச் சுட்டுதற்கு உரியர். இவர் கயிலையில் ஈசனுக்குக் கவரி வீசும் பணி புரிந்தவர் என்பது,

"சுந்தரனைத் துணைக்கவரி வீசக் கொண்டார்" (6 : 96 : 5)

எனவரும் திருநாவுக்கரசரின் தேவாரத்தினால் அறியப்படும் என்பர். இறைபணி புரியும் கமலினி, அனிந்திதை ஆகிய தெய்வ நங்கையர்பால் வைத்த மையல் தீரச் சுந்தரரும் அப் பெண்கள் இருவரும் மண்மிசை தோன்றினர் என்பது பெரிய புராணச் செய்தியாகும். தவச் சிறப்பு மிக்க தமிழகம் தழைக்கவும் அடியார்களின் வரலாற்றுத் தொகுப்பாகிய திருத்தொண்டத் தொகை உருவாகவும் ஆரூரர் அவதரித்த மாண்பினை,

"மாதவம் செய்த தென் திசை வாழ்ந்திடத்
தீதிலாத் திருத்தொண்டத் தொகைதரப்
போதுவார்" (1. 1. 25)

என்று சேக்கிழார் இயம்புதல் எண்ணத்தக்கது. திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் ஆதி சைவர் மரபில் சடையனார் இசைஞானியார் ஆகிய புண்ணியசீலர்க்குப் புதல்வராகச் சுந்தரர் தோன்றினர். இவர்க்குப் பெற்றோர் இட்ட பெயர் ஆரூரன் ஆகும். நரசிங்க முனையரையன் என்னும் குறுநில மன்னனால் வளர்க்கப்பெற்றார். பெற்றோரின் எண்ணப்படி புத்தூர் சடங்கவி சிவாச்சாரியாரின் மகளைச் சுந்தரர் மணக்கவில்லை. இறைவன் ஆணையின்படி திருவாரூரில் கமலினியாகிய பரவையாரையும் திருவொற்றியூரில் அனிந்திதையாகிய சங்கிலியாரையும் ஐந்திணை நெறிக்கேற்ப மணந்து இல்லற இன்பம் தேக்கரத்துய்த்து, தலந்தோறும் சென்று தமிழ்மாலை சூட்டிப் பல அருஞ்செயல்கள் ஆற்றி, முடிவில் கயிலைப் பேறு எய்திய காட்சியைப் பெரிய புராணம் விரித்துரைக்கும்.

கயிலை மலையின் அடிவாரத்தில் யோகியர் சூழ வீற்றிருப்பவரும் மறந்தும் புறந்தொழாச் சிவபக்தருமாய உபமன்னிய முனிவர், ஆயிரம் ஞாயிறுபோல் பேரொளி பொங்க ஆரூரர் கயிலைக்குத் திரும்பும் காட்சியைக் கண்டு கைகூப்பிப் பணிந்தனர். அவர் செயலைக் கண்டு வினவிய யோகியர்க்கு ஐயம் தீர,

"தம்பி ரானைத்தன் உள்ளம் தழீஇயவன்
நம்பி ஆரூரன் நாம்தொ ழும் தன்மையான்" (1. 1. 19)

என்று இசைத்ததாகச் சேக்கிழார் பாடியுள்ளனர். ஆதலின், சுந்தரர் யாவராலும் பணிதற்குரியர் என்பது தெளிவு. சேக்கிழார் திருத்தொண்டர் புராணச் சருக்கங்களின் இறுதிதொறும் சுந்தரரைப் போற்றிப் பாடியிருத்தல் கருதத்தக்கது.

சேக்கிழார்க்குப் பின்னர் வந்த ஆன்றோர்களும் சுந்தரரின் செந்தமிழ் ஆற்றலைப் போற்றியுள்ளனர். அவருள் மூவர் கருத்தினை மட்டும் இவண் காண்போம். திருவிளையாடற்புராண ஆசிரியர் பரஞ்சோதியார் (கி. பி. 16 நூ.) தமிழின் ஆற்றலைச் சுட்டுமிடத்து முதற்கண் ஆரூரர் ஆற்றிய அற்புதங்களையே நினைவு கூர்கிறார். அவருடைய அருந்தமிழ்ப் பாடலின் இனிமைக்காக ஈசன்கூட இரவில் பரவையாரிடம் தூது நடந்தான். எப்பொழுதோ முதலை உண்ட மதலை இவர் பாடல் கேட்டு முழு வளர்ச்சியுடன் வெளிப்பட்டான். இங்ஙனம் சுந்தரர் புரிந்த அற்புதங்கள் இரண்டினை முதலிற் கூறிப் பின்னர் சம்பந்தர் எலும்பைப் பெண்ணுருவாக்கியதும், அப்பர் பெருமான் திருமறைக் காட்டில் மறைக்கதவம் திறந்ததும் தமிழின் ஆற்றலால் விளைந்தவை என்று பரஞ்சோதியார் பாடி மகிழ்கின்றார் :

"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
உண்ட பாலனை அழைத்ததும் எலும்புபெண் உருவாக்
கண்ட தும் மறைக்கதவினைத் திறந்ததும் கன்னித்
தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்"

கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாசர் (கி. பி. 18நூ.) தாம் பாடியுள்ள நால்வர் நான்மணி மாலையில் சுந்தரரின் அருமை பெருமைகளை அழகுறப் புலப்படுத்தியுள்ளார். உலகியல் வாழ்வு வளம் பெறுதற்கு அறிவுச் செல்வமும் பொருட் செல்வமும் ஒருவர்க்குக் கட்டாயம் வேண்டும். இவ் வுண்மையினை உலகத்தவர்க்கு உணர்த்தும் பாங்கில் இறைவனின் தோழமைக் கொள்கை அமைந்துள்ளது. செல்வங்களுக்கெல்லாம் அதிபதியாகிய குபேரனையும், ஒப்பற்ற கல்விச் செல்வத்தையுடைய சுந்தரரையும் சிவபிரான் தேர்ந்து தெளிந்து தோழமை கொண்டதாகச் சிவப்பிரகாசர் கற்பனை செய்கின்றார்; முற்றும் துறந்த முனிபுங்கவ

ராகிய பெருமிழலைக் குறும்பர் என்னும் பரமயோகியும் சுந்தரரையே துதித்து உய்தி பெற்ற வரலாற்றையும் ஒருங்கே இணைத்து,

"அரித்த செல்வம் உடையானும்
அளகைப் பதியான் தோழமைகொண்டு
உயர்ந்த கல்வி உடையானும்
ஒருவன் வேண்டும் என இருந்த
துறந்த மனிதர் தொழும்பரவைத்
துணைவா! நினைத்தோழமை கொண்டான்
சிறந்த அறிவு வடிவமாய்த்
திகழும் நக்கட் பெருமானே"

என்று பாடிப் பரவினர்.

சென்ற நூற்றுண்டில் வாழ்ந்த வடலூர் வள்ளலார் சுந்தரரைப் போற்றி 'ஆளுடைய நம்பிகள் அருள் மாலை' என்னும் பதிகம் பாடியுள்ளனர். இவர் பாடியுள்ள 'இங்கித மாலை' என்னும் இனிய நூலில், ஐந்தெழுத்தினுல் அப்பர் பெருமானைக் கடலினின்றும் கரையேற்றிய இறைவன் சுந்தரரை இரண்டெழுத்தினுல் கடலில் தள்ளிவிட்டார் என்று கவிநயம் தோன்றப் புனைந்துள்ளார். அகப்பொருள் துறையில் அமைந்த அப் பாடலில் திருவொற்றியூர் இறைவனே தலைவன்; ஆன்மாவே தலைவி; குருவே தோழி. தலைவியைக் காண வந்தார் தலைவர். "ஒற்றியூர் தழைக்கவரும் பெருமானே! ஞானப் பிழம்பாகிய அப்பர் பெருமானை ஐந்தெழுத்தோதியதும் கடலினின்றும் கரையேற்றினீர்" என்று தலைவி புகழ்ந்தாள். 'நாவலனாகிய சுந்தரனை இரண்டெழுத்தினுல் கடலில் தள்ளிவிட்ட செய்தி உனக்குத் தெரியாதோ' என்று பொருள்படும்படி தலைவர் பேசினுர். அவர் மொழியின் உண்மைப் பொருளை உணர்ந்துகொள்ள ஆசான் நிலையில் உள்ள தோழியை நோக்கித் தலைவி வினவுவதாக வள்ளலார் புனைந்த பாடல் இதுவே:

"தனிகா மறையீர்! ஒற்றிநகர்
தழைக்க வாழ்வீர்! தனிஞான
ஒளிநா வரசை ஐந்தெழுத்தால்
உவரி கடத்தினீர் என்றேன்
களிநா வலனை ஈரெழுத்தால்
கடலில் வீழ்த்தினேம் என்றே
எளியேற் குவட்டின் மொழிசென்றார்
இதுதான் சேடி என்னேடீ."

திருவைந்தெழுத்தாகிய நமச்சிவாயப் பதிகத்தினைப் பாடியதும் அப்பர் பெருமான், சமணர்களால் தம்முடன் பிணைத்துக் கட்டப் பெற்ற கல்லே தெப்பமாகக் கரையேறினர். சுந்தரருக்காகக்

கடற்பெயருடைய பரவையிடத்தில் தூது (—இரண்டெழுத்து) சென்று இருவரையும் இணையச் செய்தார். இந்த வரலாற்றுக் குறிப்புகளை மையமாகக் கொண்டு கற்பனை வளங்கொழிக்க இப் பாடலை வள்ளலார் வழங்கியுள்ளார்.

இங்ஙனம் அருளாளர் பலராலும் பரவப்பெறும் சுந்தரர் பாசுரங்களில் காணப்பெறும் சிறப்பியல்புகள் சிலவற்றை இவண் காண்போம்.

தோழமை நெறி

இறைவனை அணுகுவதற்கும் அடைவதற்கும் உரிய நால் வகை நெறிகளில் தோழமை நெறியினைச் சுந்தரர் மேற்கொண் டனர் எனக் கண்டோம். ஏனைய நெறிகளில் இறைவனுக்கும் ஆன்மாவுக்கும் இடையே ஏற்படும் இடைவெளி தோழமை நெறி யில் அகன்று நெருக்கம் உண்டாகிறது. வைணவ சமயத்தினர் பார்த்தன் கண்ணனிடம் கொண்டிருந்த அணுக்கத் தொடர்பினை இந் நெறிக்கு ஏற்ற எடுத்துக்காட்டாக உரைப்பர். சுந்தரர் வரலாற்றில் திருவாரூரில் புற்றிடங் கொண்ட பெருமானே வலிய வந்து அவரைத் தோழமை கொண்டனர் என்று சேக்கிழார் இயம்பியுள்ளார். ஐம்புலனும் ஒன்றி ஆரூர்ப் பெருமானை வணங்கும்பொழுது சுந்தரர் கேட்ட வானொலியை,

"வாழிய மாமறைப் புற்றிடங்கொள்
மன்னவனா ஆரருளால் ஓர் வாக்குத்
தோழமை யாக உனக்கு நம்மைத்
தந்தனம் நாம்முன்பு தொண்டு கொண்ட
வேள்வியில் அன்றுநீ கொண்ட கோலம்
என்றும் புனைந்துநின் வேட்கை தீர
வாழிமண் மேல்விளை யாடுவாய் என்று
ஆரூரர் கேட்க எழுந்த தன்றே"

எனவரும் பாடலில் சேக்கிழார் தெளிவுறுத்தியுள்ளார். அன்று முதல் அடியார்கள் எல்லாம் "தம்பிரான் தோழர்" என்றே சுந்தரரை அழைத்தனர். ஆசைகளை நுகர்ந்து கழித்து மாசற்ற மனத் துடன் மேற்கதி பெறுதற்குரிய வாய்ப்பினை மண்ணகம்தான் வழங்க முடியும். இதனை, "ஆசையுடன் மேனோக்கிச் செல்லுதல் என்பது பாரத்தைக் கட்டிக்கொண்டு பறப்பதற்குச் சமம். எனவே தான், "நின்வேட்கை தீர, வாழிமண்மேல் விளையாடுவாய்" என்று இறைவன் அறிவிக்கின்றான். அன்றியும்,

"ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக் குடனாகி
மாழையொண்கண் பரவையைத்தந் தாண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கேன் என்ஆரூர் இறைவனையே"

எனவரும் அகச்சான்றிலும் சுந்தரர் இறைவனைத் தோழனாகக் கொண்டு உரிமை பாராட்டிய உண்மையை உணர்கிறோம். இவர் மேற்கொண்ட இந் நெறியில் தோழமைத் தன்மைகளைப் புலப்படுத்தும் இரண்டு இடங்களை மட்டும் இவண் சுட்டுவோம்.

திருமுதுகுன்றப் பதிகம்

சுந்தரர் திருமுதுகுன்றத்திற்கு வருகிறார். நல்ல நகரம். மாட கூடங்களும் மதில் சூழ்ந்த கோபுரங்களும் மணிமண்டபங்களும் அந் நகரினை அணி செய்கின்றன. அம்மட்டோ! வானோங்கிய சோலைகளில் மேகங்கள் தவழ்கின்றன. இங்ஙனம் இயற்கையும் செயற்கையும் இணைந்து எழில்தரும் முதுகுன்றில் கோயில் கொண்ட பழமலை நாதரைப் பார்த்து ஆரூரர் உரிமையுடன் கேட்கிறார்: "அடியார் திருக் கூட்டம் புடைசூழ வீடுதொறும் சென்று இறைவன் ஆடிப்பாடித் தொகுத்த பொருளை எல்லாம் அம்மையின் பெயரில் காப்பிடுவது முறையாகுமா? அப் பொருளில் அடியார்களுக்குப் பங்கு இல்லையா?" என்று விநயமாக வினவுகிறார்:

"ஆடி அசைந்து அடியாரும் நீரும் அகந்தொறும்
பாடிப் படைத்த பொருளெ லாம்உமை யாளுக்கோ
மாட மதிலணி கோபு ரம்மணி மண்டபம்
மூடி முகில்தவழ் சோலை சூழ்முது குன்றரே."

இறைவனிடம் கொண்ட தோழமை காரணமாக இங்ஙனம் சுந்தரர் வினவும் இடங்கள் மேலும் பலவுள்ளன.

திருநாகைக்காரோணப் பதிகம்

நாகைப்பட்டினம் சிறந்த துறைமுகப்பட்டினம். கிழக்கிந்தியத் தீவுகளிலிருந்தும் சீன நாட்டிலிருந்தும் இங்கு வணிகர்கள் வருவது வழக்கம். பல வகையான நறுமணப் பொருள்களும் ஆடம்பரப் பொருள்களும் இங்கு நிரம்பக் கிடைக்கும். சுந்தரர் தம் பெயருக்கு ஏற்பச் சிறந்த வனப்பு மிக்கவர். இவ்வூர் இறைவனிடத்தில் தோழமையினால் முத்தாரம், மணி வயிரக் கோவை, கத்தூரி, சந்தனம், பட்டாடைகள், பொற்கட்டி முதலியவற்றை வேண்டுகின்றார். இறைவனுக்குரிய பொருள்களில் மூன்றில் ஒரு பங்கு தரும்படியும் கேட்கிறார். திருநாகைக் காரோணப் பதிகம் முழுதும் சுந்தரர் இறைவனை வேண்டும் உலகியல் இன்பப் பொருள்களை அழகுறத் தொகுத்துரைக்கக் காணலாம். பொன்னும் மெய்ப்பொருளும் தரும் பெருமானே இம்மையில் போகமும மறுமையில் வீட்டின்பமும் வழங்குவான் என்பது அவர் நம்பிக்கை. மேற்சுட்டிய பதிகத்தில்,

"முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக் கோவை
அவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறும்
கத்தூரி கமழ்சாந்து பணித்தருள வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே."

"அணியாரூர் புகப்பெய்த அருநெதியம் அதனில்
தோற்றமிகு முக்கூற்றில் ஒருகூறு வேண்டும்
தாரீரேல் ஒருபொழுதும் அடியெடுக்கல் ஒட்டேன்
காற்றனைய கடும்பரிமா ஏறுவதும் வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே"

எனவரும் பகுதிகள் சுந்தரரின் வரம்பு கடந்த தோழமைக்குத் தக்க சான்றாகும். இறைவனின் தோழனாகிய சுந்தரர் வேந்தராகிய சேரமான் பெருமாள் நாயனாரின் உரிமைத் தோழராகவும் திகழ்ந்து தோழமை நெறியினைப் பேணிய பாங்கினைப் பெரிய புராணம் தெளிவுறுத்துகின்றது.

**யோகநெறி**

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நால்வகைச் சாதனங்களும் இறைவனை அடைய வழிகாட்டுவன ஆகும். இந்நான்கும் அரும்பு, மலர், காய், கனி போன்றவை. இந்நான்கினுள், சுந்தரர் யோகநெறி நின்று ஞானம் பெற்றவர். யோகம் என்ற சொல்லிற்கு ஒன்றுபடுதல் எனப் பொருள் உரைப்பர். சிந்துவெளி நாகரிககால அளவிற்கு இந்நெறி பழமைவாய்ந்தது. யோக சூத்திரத்தை எழுதிய பதஞ்சலி முனிவர் தில்லையில் வாழ்ந்த சிவநேசச் செல்வர். திருமந்திரம் யோகநெறியை விளக்கும் தமிழ் ஆகமநூலாகத் திகழ்கிறது. பரம்பொருளுடன் உயிர் கலந்து இன்புறுதலை விளக்கவே யோக நூல்கள் எழுந்தன. பதஞ்சலி முனிவர், "யோக: சித்த விருத்தி நிரோத:" என்று இயம்பியுள்ளார். சித்தம் கடல் அலையைப்போல ஒன்றன்பின் ஒன்றாக உலகப் பொருள்களைப் பற்றி விருத்திபெறுவதைத் தடுத்து நிறுத்துவதுதான் யோகத்தின் முதல்நோக்கமாகும். போகம் மேற்கொண்ட பொழுதுகூட யோக உணர்வே சுந்தரர்க்கு மேம்பட்டது என்பதை,

"தென்னாவ லூர்மன்னன் தேவர்பிரான் திருவருளால்
மின்னாரும் கொடிமருங்குல் பரவையெனும் மெல்லியல்தன்
பொன்னாரும் முலைஓங்கல் புணர்குவடே சார்வாகப்
பன்னாளும் பயில்யோக பரம்பரையின் விரும்பினார்"

எனவரும் சேக்கிழார் வாக்கினால் உணரலாம்.

உடம்பில் மூலாதாரத்தில் முடங்கியிருக்கும் குண்டலினி என்னும் ஆற்றலை பிராணாயாமம் என்னும் மூச்சுப்பயிற்சியினால் எழுப்பிச் சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களிலும் படிப்படியாக நிறுத்தி இறையுணர்வுடன் தவமேற்கொண்டு வியத்தகு சித்திகளைப் பெற்று முடிவில் இறைவனுடன் இரண்டறக் கலத்தல் யோக நெறியின் முடிந்த பயனாகும். சுந்தரர் யோகநெறியில் நின்று இறைவனைக்கண்டு இன்பம் துய்த்தவர் என்பதற்கு,

"சிம்மாந்து சிம்புளித்துச் சிந்தையினில்
வைத்துகந்து திறம்பா வண்ணம்
கைம்மாவின் உரிவைபோர்த் துமைவெருவக்
கண்டானைக் கருப்பறியலூர்க்
கொம்மாவின் மலர்ச்சோலைக் குயில்பாட
மயிலாடுங் கொகுடிக் கோயில்
எம்மானை மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக்கு இனிய வாறே."

"தேடுவன் தேடுவன் செம்மலர்ப் பாதங்கள் நாள்தொறும்
நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேயோர் நால்விரல்
மாடுவன் மாடுவன் வன்கை பிடித்து மகிழ்ந்துளே
ஆடுவன் ஆடுவன் ஆமாத்தூர் எம் அடிகளே"

எனவரும் அவர் பாசுரங்களே ஆதாரமாகும். மேலும், தில்லையில் ஆனந்த நடனம்புரியும் கூத்தபிரானைக்கண்டு யோகநிலையில் ஒன்றிய உள்ளத்தினராய்ச் சுந்தரர் வணங்கினர் என்பதைப் பெரிய புராணத்திற் காண்கிறோம். ஐம்பொறிகளின் அறிவெல்லாம் ஒருங்குதிரண்டு சுந்தரர் கண்களிடை ஒளியாய்த் திகழ்ந்து கூத்தனின் கோலத்தைக் கண்டன. அகக்கருவிகள் நான்கும் ஒன்றுபட்டுச் சிந்தைமயமாய் நின்று சேவித்தார். அங்ஙனம் வழிபடுங்கால் முக்குணங்களும் திரண்டு சத்துவகுணமாக விளங்கின. திங்கள் முடிசூடிய பெருமான் ஆடும் எல்லையில்லாத ஆனந்த தாண்டவத்தினால் விளையும் பேரின்ப வெள்ளத்தில் சுந்தரர் திளைத்து மகிழ்ந்த செய்தியை,

"ஐந்துபேரறிவும் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணம்ஒரு மூன்றும்
திருந்துசாத்து விகமே ஆக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபேர் இன்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்."

என்று சேக்கிழார் எழிலுறப் பாடியுள்ளார்.

(தொடரும்)

# "கடவுட் பழம்பாடல்—ஒரு விளக்கம்"

[ஆ. கந்தசாமி, எம் ஏ , எம் பில் , பி. எட்., சென்னை]

கி பி. 17ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த குமர குருபரர் மீனாட்சியம்மையைத்

"தொடுக்குங் கடவுட் பழம்பாடல்
தொடையின் பயனே நறை பழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ்
சுவையே"

என மொழியோடு தொடர்புபடுத்திப் பாடுகின்றார். இப் பாடலில் வரும் 'கடவுட் பழம்பாடல்' என்ற தொடர் எதனைக் குறித்தது? வட வேதத்தையா? தமிழ்ப் பாடலையா? இப் பாடலுடன் தொடர்புடைய காரணத்தால் இவர் பாடிய முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ்ப்பாடல் வரிகளும் விளக்கங்கருதி இணைத்து நோக்கப் படுகின்றன.

'மறை' என்ற சொல் வடவேதத்தை மட்டும் குறிக்குமா? தமிழ் மறையையும் சுட்டுமா? பழம்பாடல் என்பது வேதத்தைக் குறித்ததா? இப் பாடலில் தமிழையே இருமுறை அடுக்கிக் கூறு வானேன்? நாயன்மார் (நால்வர்) பாடல்களை இவர் அறிந்து ஈடுபட்டமைக்குச் சான்றுகள் உண்டா? இதுபோல், அம்மையைத் தமிழோடு இணைத்துக் கூறக் காரணமென்ன? நால்வர் பாடல் களைப் பழம்பாடல் என்னால் பொருந்துமா? சங்கப் பாடலே முன்னர்க் கூறாது பக்திப் பாடலே (தேவார திருவாசகம்) முன்னர்க் கூறியது சரியா? இவ்வாறு இரு பொருள்படும்படி இத் தொடரை அமைக்க வேறு காரணமுண்டா?

மேற்குறித்த மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் வருகைப் பருவத்தில் அமைந்த பாடலில், அம்மையைக் 'கடவுட் பழம் பாடல் தொடையின் பயனாக'க் குமரகுருபரர் புதுமையாகக் கூறுகின்றார். இங்குள்ள பழம்பாடல் என்பதற்கு முனைவர் உ. வே. சாமிநாதையர் வடமொழி வேதம் எனப் பொருள் கொள் கிறார். இந்நூலின் உரையாசிரியர்களுள் ஒருவரான புன்னைவன நாதமுதலியார் 'தொடுக்கப்படும் தெய்வத் தன்மையுடைய பழைய பாடல்களாகிற மாலையின் பொருளாயிருப்பவள்' எனப் பொதுவாகப் பொருள் கொள்கின்றார். குமரகுருபரர் பாடல்களை ஆய்வு நோக்கில் கண்ட பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை பழம்பாடல் என்பதற்குத் தமிழ்ச் செய்யுள் என்றே பொருள் கொள்கிறார். சிதம்பரம் ராமலிங்கம் பிள்ளை என்பவர் 'கடவுட்

பழம்பாடல்—வேத சிவாகமங்கள்' எனப் பொருள் சொல்கின்றார். இவற்றால் இத்தொடருக்குப் பொருள் கொள்வதில் மாறுபட்ட இரு கருத்துகளிருப்பதை அறிய முடிகிறது.

உ.வே.சா. தமது பதிப்பில் கந்தர் கலிவெண்பாவில் 'பாமேவு தெய்வப் பழமறையும்' என்ற தொடருக்குப் பின்னால் தாம் எழுதப்போகும் உரையை நினைவிற்கொண்டு 'தெய்வப் பழமறையாவது—'தொடுக்குங் கடவுட் பழம்பாடல்' எனக் குறிப்பிடுகின்றார். இதனால், பழமறை என்ற சொல்லுக்குப் பழையவேதம் எனப் பொருள்கொண்டு, அதன் அடிப்படையில் கடவுட் பழம்பாடல் என்பதற்கும் பழைய வேதம் எனப் பொருள் கொள்கின்றார் என்பது விளங்குகின்றது. வடவேதம் மட்டுமே கடவுளைப்பற்றிக் கூறும் பழமை வாய்ந்தது என்பது அவர் கருத்தாயிருந்திருக்க வேண்டும். ஆனால் குமரகுருபரர் எதனைக் குறிப்பிடுகின்றார் என்பதே நாம் காணவேண்டியது. அவ்வகையில் 'மறை' என்ற சொல்லைப்பற்றிய விளக்கத்தை நாம் காண வேண்டும்.

**'மறை'—சொல் விளக்கம்**

குமரகுருபரர் 'மறை' என்ற சொல்லைப் பலவிடங்களில் பயன்படுத்துகிறார். அச் சொற்களை ஆய்ந்த கா. சு. பிள்ளை,

"பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற" என்றவிடத்து மறை என்ற சொல் வடவேதத்தைக் குறித்தது. 'பூமேவு செங்கமலப் புத்தேளுந் தேறரிய', 'உரையாத பழமறையின் முதலெழுத்தின்' என்னும் அடிகளிலே அது நாத தத்துவத்திலுள்ள நாதகலையைக் குறிக்கும். 'பழமறையின் குருந்தே வருக' 'செழுமறை வடித்த தமிழ்த்திருப்பதிகம்' என்ற இடங்களில் அது தமிழ்மறையைக் குறிப்பதாயிற்று என்ற முடிவுக்கு வருகின்றார். மேலும் அவர்,

> "பண்ணோர் வேதம் என்றவிடத்துப் பண் என்பது தமிழிசையைக் குறிக்குமாதலின் 'வேதம்' என்பது தமிழ்மறையை உணர்த்தும்"

என மறை என்ற சொல்லேயன்றி 'வேதம்' என்ற சொல்லும் தமிழ்ப்பாடலைக் (மறை) குமரகுருபரர் குறிப்பதாகக் கூறுவதும் சிந்திக்கத் தக்கதாகும். குமரகுருபரர் மறை என்ற சொல்லால் தமிழ்மறையை எட்டிடங்களில் குறிப்பிடுகின்றார். வடமொழி வேதத்தை அச்சொல்லால் கூறுங்கால் 'நான்மறை நவின்ற' 'உரையாத பழமறையின்' 'எழுதாமறையோடு' என்பன போன்ற அடைமொழிகளால் வேறுபடுத்திக் காட்டும் போக்கும் காணப்படுகிறது. ஆதலின் பழமறை என்ற சொல் வடவேதத்தைக்

குறித்தது என உ.வே.சா. பொருள் கொண்டது பொருந்தாது என்பது விளங்கும். அடுத்து 'தமிழ்மறை' எது என்ற வினா எழும்.

''தேவாரம் தமிழ் வேதம் எனப் போற்றப்படும். அதனாலேயே தொன்றுதொட்டுத் திருவிழாக் காலங்களில் வேதம் ஓதுவதுடன், தேவாரம் ஓதுவதும் வழக்கமாய் இருந்து வருகிறது.........சைவசமயத்துக்கு அடிப்படையாய் இருப்பது தேவாரம்'' என்று கலைக்களஞ்சியம் கூறுவதால் தமிழ்மறையாக நாயன்மார் பக்திப் பாசுரங்களைக் குறித்தமை புலப்படும். அடுத்து, அதன் தொடர்பாகப் பழம்பாடல், என்ற சொல்லின் பொருளைக் காணுதல் வேண்டும்.

பழம்பாடல் என்ற சொல்லுக்குத் தமிழிலுள்ள பழைய பாடல் என்பதே இயல்பாகப் பொருளாயிருக்க, வடமொழி வேதம் எனப் பொருள்கொள்ளுதல் வலிந்து பொருள்கொள்வ தாகத் தோன்றுகிறது. மேலும், ''தேவாரம் பழம்பெருமை வாய்ந்த பக்திப் பாடல்களாக இருப்பதோடு மட்டும் அல்லாமல், ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன் இருந்த நாட்டின் இசை மரபுகளைக் காத்துவரும் பழைய இசைச் செல்வமாகவும் இருந்து வருகிறது.........இவ்வளவு பழமையான இசைச் செல்வம் உலகில் எங்கும் இந்த அளவிற்குக் கிடைக்கவில்லை என்ற கூற்றும் தேவாரப் பாடல்களைப் பழம்பாடல்களாகக் கருதுவதற்குத் துணை செய்கிறது. அடுத்து ஒரே பாடலில் தமிழையே இருமுறை கூறியதேன் என்ற ஐயம் எழுகிறது.

உ. வே. சா. 'கடவுட் பழம்பாடல்' என்பதற்கு 'வேதம்' எனப் பொருள் கொண்டமைக்கு வேறு காரணமும் உண்டு. அது,

''தொடுக்குங் கடவுள் பழம்பாடல் தொடையின் பயனே''
''நறைபழுத்த துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ் சுவையே''

என ஒரே பாடலில் மொழியோடு தொடர்புபடுத்தி அம்மையை விளிப்பதாகும். அதனால் ஒன்று வடமொழி (வேதம்) மற்றொன்று தமிழ் எனப் பொருள் கொண்டு இருமொழியும் இணைந்தவளாக அம்மையைக் குமரகுருபரர் கூறுவதாக உ. வே. சா. கருதுகின்றார். ஆனால் ஒரே பாடலில் 'தமிழையே இருமுறை அடுக்கிக் கூறும்' போக்கு இவர் பாடலில் வேறிடத்திலும் காணப்படுகின்றது. முருகனைக் கூறுமிடத்தும்,

''கேள்வி நலம் கனியக் கனிய அமுதூறும் கடவுள் மறையும்''
''முதற் சங்கத் தலைப்பா வலர்தீஞ் சுவைக்கனியும்''

என இம்முறை காணப்படுகின்றது. எனவே, தமிழை இருமுறை அடுக்கிக் கூறுதல் இவரின் தனித்தன்மை என்பதனை அறிய

லாம். மேலும் 'கடவுட் பழம்பாடல்' 'துறைத்தீந் தமிழ்' என்பவற்றின் விளக்கமாகவும் இப்பகுதி அமைவதையும் காணலாம். இவ்வாறு தமிழையே அடுக்கிக் கூறுவது ஏன்? என்ற ஐயம் எழும். இதற்கு விளக்கம் காணும்போது குமரகுருபரர் இறைவியைப் (முருகனையும்) புதுமையும் கற்பனையழகும் தோன்றப் படைத்துள்ளமை புலனாகின்றது. மேற்குறித்த (முருகன்) பகுதிக்கு கா. சு. பிள்ளை 'தமிழ் மறையும், முதற் சங்கப் பாவலர் பாநயமும் கனிந்த பசுந்தமிழ்' எனப் பொருள் கொள்ளுதலும் சிந்திக்கத்தக்கது. மேலும் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் நீராடற் பருவத்தில் இடம்பெறும் "துறைத்தமிழ்" என்ற சொல்லுக்கு 'துறைத் தமிழாவது அகமும் புறமுமாகிய துறைகளையுடைய தமிழ்' என உ. வே. சா. விளக்கந் தருதலும் காணத்தக்கது. இங்கு முதற்சங்கப் புலவர் எனக் குமரகுருபரர் குறிப்பிட்டது, பொதுவாக சங்கப் புலவர்களை நினைத்தேயாகும். அவர் காலத்தில் முச்சங்கம் பற்றிய தெளிவான கால வரையறையினை அறிந்திருக்க வாய்ப்பில்லை. அதனால் அவர் அவ்வாறு கூறியிருக்கலாம்.

மேற்கூறியவற்றால் மீனாட்சியம்மையை, நால்வரின் பத்திப் பாடல்களின் பயனாகவும், சங்கத் தமிழ்ப் பாடல்களின் பயனாகவும் இருப்பதாகக் குமரகுருபரர் கூறுகின்றார் எனப் பொருள் கொள்ளலாம். இதனால், தமிழின் பயனும் பண்பும் கூறப்பட்டது.

"தித்திக்கும் தெள்ளமுதாய் தெள்ளமுதின் மேலான
முத்திக் கனியேயென் முத்தமிழே"

எனத் தமிழ்விடு தூதும் தமிழின் பண்பும் (அமுது) பயனும் (முத்திக்கனி) கூறுவதும் ஒப்பிட்டுக் காணத்தக்கது. மேலும் இவர், சங்க நூல்களில் பயிற்சியுடையவர் என்பது இவர் பாடல்களால் அறிய முடிகின்றது.

சங்க காலத்தில் பாடுபொருளாய் அமைந்தது அகம்—புறம். நாயன்மார் (நால்வர்) பாடுபொருளாய் அமைந்தது இறைமை. இவ்விரண்டையுஞ் சுட்டி இரண்டின் தன்மையிலும் இறைவியுள்ளாள் எனக் கூறும் குமரகுருபரரின்—கருத்தழகு வேதம் எனப் பொருள் கொள்ளும்போது வெளிப்படாது போதல் காணத்தக்கது. மேலும், 'தொடையின் பயனே', என்பதற்கு தொடுக்கப்படும் தமிழ்ப் பாடல்களில் எதுகை, மோனை முதலிய தொடைகள் செம்மையாய் அமைந்துவிடுமானால் கவிஞர்க்குப் பேரின்பம் விளைப்பதாகும். அவ்வின்பமாய் அம்மை உள்ளாள் எனப் பொருள் கொள்ளலாம்

''எத்தனையோ இன்பம் இந்த நாட்டிலே உண்டு
அத்தனைக்கும் பெரிய இன்பம் பாட்டிலே உண்டு'

என இருபதாம் நூற்றாண்டுக் கவிஞன் பாட்டிலே இன்பத்தைக் கண்டான். குமரகுருபரர் அவ் வின்பத்தை இறைவியாகக் கண்டார். காலத்தின் தாக்கம் கருத்தாக முகிழ்ப்பதைக் காண்கின்றோம். சங்கப் பாடல்களைவிடக் காலத்தின் வளர்ச்சியால் தேவார திருவாசகப் பாடல்களில் தொடை நலம் சிறந்து விளங்குதலையும் நினைவிற் கொள்ள வேண்டும். இவ்வாறு பொருள் கொள்ளுங்கால் தேவார திருவாசகப் பாடல்கள் இவர் அறிந்து சுவைத்திருந்தாரா என்ற ஐயம் எழுகின்றது.

**நால்வர் பாடல்களையும் அறிந்து சுவைத்தமைக்குச் சான்றுகள்**

இவர் காலத்தில் தில்லையில் மூவர் பாடல்களும் மறைகளாகத் தொகுத்து வைக்கப்பட்டிருந்த செய்தியை இவரே, 'பரசிருக்குத் தமிழ்மூவர் பாட்டிருக்குந் திருமன்றில்' என்று குறிப்பிடுகின்றார். திருஞான சம்பந்தர் தம்மைப் பலவிடங்களில் 'தமிழ்விரகன்' எனத் தாமே கூறிக் கொள்வார். எனவே, அவரைத் தமிழ் விரகன் எனக் கூறுதல் மரபு, மாணிக்கவாசகரின் வாசகத்தில் உருகிய குமரகுருபரர் இம் மரபை மாற்றி மாணிக்கவாசகரைச் ''சொற்றமிழ் விரகன்'' எனக் குறிப்பிடுகின்றார். காசியிலுள்ள இறைவன் சுந்தரரின் பாடல்களையே தம்மிரு செவிகளிலும் குண்டலங்களாக அணிந்துள்ளான் எனக் குறிக்கின்றார். இவ்வகைச் சான்றுகளால் இவர் நால்வர் பாடல்களையும் அறிந்து சுவைத்திருந்தார் என்பது விளங்கும். மேலும், சைவந்தழைக்க ஊர்தோறும் சென்று தமிழால் பாடிய இவர்களின் பாடலைச் சைவரும் தமிழும் தழைக்க வடநாடுவரை சென்று பாடுபட்ட குமரகுருபரர் நினைத்துப் பாராட்டினார் எனக் கூறுதல் பொருத்தமுடையதாகும். எனவே அப் பாடல்களின் பயனாய் இறைவி உள்ளாள் எனக் கூறினார். மேலும் இவர் வாழ்வின் முற்பகுதியில் வடமொழிப் பயிற்சி இல்லை. இவர் தந்தையாரும் வடமொழி கற்றவரல்லர். இவர் சிவ தீக்கை பெற்றாரே யொழிய வேதமுறைப்படி தீக்கை பெறவில்லை. எனவே இப் பாடலை இயற்றுங்கால் இவர் வடமொழியைச் சுவைத்திருக்க வாய்ப்பிலலை. எனவே சுவைத்த தமிழின் பயனாகவே இறைவியைக் கண்டார் என்பதே பொருந்தும். இவ்வாறு கருதுங்கால், இறைவியைத் தமிழோடு மட்டுங் இணைத்துக் கூறவானேன் என்ற ஐயமே எழுகின்றது.

**அம்மையைத் தமிழோடு இணைக்கக் காரணம்**

இவர் வேறிடங்களில், 'தமிழோடு பிறந்து பழமதுரையில் வளர்ந்த கொடி' என ஐந்து முறை கூறுகின்றார அம்மை, சிவன்,

முருகன் மூவரும் மதுரையில் வந்து ஆட்சி புரிந்தமைக்குக் காரணம் குடும்பத்தோடு தமிழைச் சுவைக்க வேண்டுமென்ற விருப்பமே—எனக் காரணங் கற்பிக்கின்றார். எனவே, இவர் வடமொழியை விடுத்துத் தமிழோடு மட்டும் இறைவியை இணைத்துக் கூறும் போக்கு காணப்படுகின்றது. மேலும், சிவன், முருகன் கலைமகள் இவர்களையும் தமிழ்த் தெய்வங்க ளாகவே காணுகின்ற புதுமையும் இவரிடத்தில் காணமுடிகின் றது. இதனால் இவர் தமிழின்மீது கொண்டிருந்த பெரும்பற்று விளங்குகின்றது. அப் பற்றினாலேயே இவ்வாறு தமிழோடு இணைத்துப் பாடுகின்றார் என்ற உண்மை விளங்கும். தமிழினி டத்தே இம் முனிவர் தெய்வத் தன்மையைக் கண்டனர். அதனைத் தெய்வத் தமிழ் (49. 152) என்று பாராட்டு கின்றார் தாம் பாராட்டும் தெய்வங்களெல்லாம் தமிழ்த் தொடர்பும், தமிழின்பால் வேட்கையும் உடையவர்களாகக் கூறு கின்றனர் என உ. வே. சா. ஆராய்ச்சி முன்னுரையில் கூறு வதும் இக் கருத்துக்கு அரணாகும். குமரகுருபரர் பாடல்களை ஆய்ந்து இம் முடிவுக்கு வந்தவர். குறிப்புரை எழுதும்போதும் வடமொழியோடு தொடர்புபடுத்திக் கூறுவது முரணாக அமை கின்றது: இதனால், ஆய்ந்து உண்மை காணுகின்ற போக்கும், சாதாரணமாகப் பொருள் குறித்துச் செல்லும் போக்கும் உ. வே. சா.விடம் காணப்படுகின்றது. இதுவரை கண்டவற்றால், தமிழினி யளாக, சுவையாக இறைவி இருப்பதைக் கூறுவதாக அறிந் தோம். அவ்வாறு, அவர் கூறுங்கால் சங்கத் தமிழை முன்னர்க் கூறாது பக்திப் பாடலை முன்னர்க் கூறுவது ஏன் என்ற ஐயம் எழுகின்றது.

சங்கத் தமிழை முன்னர்க் கூறிப் பின்னர்ப் பத்திப் பாடல் களைக் கூறுவதே முறைமையாகும். ஆனால், இவர் இம்முறையை மாற்றிக் கூறியதற்கான காரணம் என்ன? என்ற வினா எழுதல் இயல்பே. ஈண்டும் ஒன்றை நாம் கருத்திற் கொள்ள வேண்டும். குமரகுருபரர் பாடுபொருளாகக் கொண்டதும் பாடுவதும் இறை மையை. எனவே தம் கருத்துக்குத் துணையாயுள்ள பாடல்களை இறைவியைப் பாடும் பாடலில் முதன்மையளித்துப் போற்றுதல் பொருத்தமுடையதே. கால அடிப்படையைக் கொள்ளாது கருத் தளவில் முதன்மை தந்தார் எனக் கொள்ள வேண்டும். இவ்வாறு பொருள் கொள்ளுதலின் பயனால்—இறைவியைப் புதுமையாகக் கற்பனை செய்து காணும் உண்மை புலப்படும். உள்ளுணர்வால் உணர்ந்த தமிழ்—இறைமை இவ் விரண்டையும் இணைக்கும் முயற்சியில் கற்பனை பயன்படுவதை அறியலாம். ஐம்புலன் களாலும், மனத்தாலும் உணரும் இன்பத்தை, பிற உணர்வுகளை,

அறிவுகளை ஏதேனும் ஒரு நிலையான ஊடுபொருள் வாயிலாக வெளியிடும்போது அது கலையாகின்றது என்ற கருத்தும் ஈண்டு நினைக்கத்தக்கது. மேலும், இப் பாடல் வரி இவ்வாறு இருபொருள் கொள்ளும்படி அமைந்தமைக்கு வேறு காரணம் இருக்குமோ என்ற ஐயம் எழலாம்.

உரையாசிரியர்கள் (வேதம், தமிழ்ப் பாடல்களை) இரு பொருள் கொள்ளும்படி அமைத்தமைக்கு அக்காலச் சூழலும் ஒரு காரணமாய் இருக்கலாம். அப்போது தமிழகத்தைத், தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்ட வடமொழி ஆதரவாளர்களாகிய நாயக்க மன்னர் ஆண்டனர். எனவே, வடமொழிப் பற்றுளரும் மகிழும்படி இருபொருள்படப் பாடியிருக்கலாம் எனக் கருதவும் இடமுளது. அவ்வாறாயின், அவர் அதனில் ஓரளவு வெற்றி பெற்றார் என்றே கருதலாம்.

மேற்காட்டிய சான்றுகளிலிருந்து, மறை என்ற சொல் இங்குத் தமிழ்மறையைக் குறித்தது என்பதும் பழம்பாடல் என்பதும் தமிழ்ப் பாடலையே குறித்தது என்பதும் தெரிய வருகின்றது. பத்திப் பாடல்களின் பயனாகவும் சங்கப் பாடல்களின் சுவையாகவும் இறைவியைக் கண்டமையால் இருமுறை அடுத்துக் கூறுகின்றார். பத்திப் பாடலுக்கு (தேவார, திருவாசகம்) முதன்மை தந்தது கருத்தளவிலாகும். எனவே, கடவுட் பழம்பாடல் என்பது தமிழ்மறையாகிய பத்திப் பாடல்களையே ஆகும்.

இவ்வாறு, பொருள் கொள்வதால் குமரகுருபரரின் கருத்தழகும் புதுமையான கற்பனையும் மேலும் சிறப்புறுகின்றமை தெளிவாகின்றது.

---

## அறியாதார் பேச்சு

ஆங்கில மொழியை எடுத்துக்காட்டி அதிற் பலவேறு மொழிகள் கலந்திருப்பதே அதனுடைய வளர்ச்சிக்கும் பரவுதலுக்குங் காரணம் என்பர் சிலர். ஆனால், ஆங்கில மொழியின் வரலாற்றை அவர்கள் செவ்வையாக அறிந்துதான் பேசுகின்றார்களோ என்பது எனக்கு ஐயமாயிருக்கின்றது. ஆங்கிலமானது சொல்வளமில்லாத ஏழை மொழி; பழைய நாளில் நாகரிகமில்லாத ஒரு சிறு கூட்டத்தவராற் பேசப்பட்ட மொழி: காலங்கடோறும் பிற நாடுகளிலிருந்து வந்த முரடர்களான வேறு வேறு மக்களால் அலைப்புண்டு, அவர்கள் கொண்டு வந்த பல்வேறு மொழிகளாற் கலப்புண்டு தன் தூய்மை யிழந்த மொழி; காலங்கடோறும் மாறிக்கொண்டு வந்த மொழி. இதனைப் பேசும் மக்கள் அறிவிலும், முயற்சியிலும் மேம்பட்டு நாகரிகத்திற் சிறந்து வாழ்ந்து வழங்கிய பின்னரே, தமது மொழியை இனித் திரிந்து போக விட்டால் தமது வாழ்க்கை நிலையாது என நன்குணர்ந்து, அதற்கு இலக்கண இலக்கிய வரம்பு கோலி அதனைக் கண்ணுங் கருத்துமாய்ப் பாதுகாத்து வருகின்றார்கள்.

—மறைமலையடிகள்

(மறைமலையடிகளார் உரைமணிக் கோவை, பக். 63)

# பண்ணாய்வு செய்யும் முறைகள்

## 1. சாதாரிப் பண் எது?

[பேராசிரியர் வி. ப. கா. சுந்தரம்,
*தமிழிசை ஆய்வாளர்—மதுரை*]

**பண்ணாராய்ச்சி செய்யும் இடங்கள்:**

சென்னை இராசா அண்ணாமலை மன்றத்திலும் பிற பெருநகர் இசைமன்றங்களிலும் பண்டைப் பண்களுக்குரிய இன்றைய பண்கள் எவை என்ற ஆய்வுகள் நடந்து வருகின்றன. 1949-ஆம் ஆண்டுமுதல் ஆண்டுதோறும் சென்னையில் பண்ணாராய்ச்சிக் கூட்டங்கள் கூடிப் பண்களைப்பற்றிய ஆய்வு நடத்தி முடிவு செய்து வருகிறார்கள்; இது பெரிதும் பாராட்டற்குரியது; மிக அரிய செயல் செய்தற்கு உரிய செயல்.

**இங்கு பண்ணை ஆராயும் முறை:**

தேவாரப் பதிகங்களை ஓதுவார்கள் பாடுவார்கள்.

எ-டு: சாதாரிப் பதிகத்தை ஒருவர் இருவர் பந்துவராளியில் பாடிக்காட்டினர். எனவே பண்டைய சாதாரி என்பது இன்றைய பந்துவராளி என்று முடிவு செய்வார்கள். இது சரியா? பண்டைக்காலப் பண்களைப் பாடாமல் மறந்துவிட்ட இடைக் காலம் ஒன்று இருந்தது. இதற்குப் பின்னர் தேவாரப் பதிகங்களைப் பாடகர்கள் தத்தம் விருப்பப்படி ஏற்ற இராகத்தில பாடி மகிழ்ந்தார்கள்; தாம் பாடி மகிழ்ந்த ஓர் இராகத்தையோ பல இராகத்தையோ பண்டைய பண்களுக்கு நேராகக் குறித்து வைத்துப் பட்டியல் செய்தார்கள். எ-டு: இரண்டு பண்டைய பண்களுக்கு ஒரே ஓர் இராகம் குறித்த குறிப்புகள் உண்டு; ஒரு பண்டைய பண்ணுக்கு இன்றைய பண்கள் பலவற்றைக் குறித்த குறிப்புகள் உண்டு எ-டு: நட்டராகம், சாதாரி ஆகிய இரு பண்டைய பண்களுக்கும் பந்துவராளியே குறிக்கப் பட்டுள்ளது. புகழ்பெற்ற ஓதுவார்கள் வெளியிட்டுள்ள பண்டைய பண்ணிற்குரிய இராக அட்டவணையில் இவ்வாறு குறிக்கப்பட்டுள்ளது. இதுபற்றி க. வெள்ளை வாரணப் பெரியார் கூறுவதை அறிவோம்: "இன்றைய பண்ணுக்கு இன்ன இராகம் என்று குறித்த முறையில் நவரோசு என்ற ஒரே ராகம் கொல்லி, கொல்லிக் கௌவாணம், காந்தாரம், பியந்தைக் காந்தாரம் என்ற நால் வேறு பண்களுக்கும் உரியதாக அமைக்கப் பட்டிருப்பதைக் கூர்ந்து நோக்குங்கால்.........இங்ஙனம்

தேவாரப் பண்களுக்கு இராகம் வகுத்த காலத்தில் மேற்குறித்த நால்வேறு பண்களுக்கும் இடையே அமைந்த சிறப்பியல்பினை யுணர்ந்து பாடும் இசை மரபு மறக்கப்பட்டு மறைந்தமை நன்கு புலனாகும்''—('தமிழிசை' நூல் (1979 ப. 91)

எனவே—ஓர் இராகத்திற்குப் பல பண்டைய பண்களைக் குறிப்பதினின்றும்—இராகத்திற்குரிய பண் கண்டு குறிக்கவில்லை என்பது தெளிவு. பண்டைய பண்ணுக்குரிய பதிகங்களைப் பிற்காலத்தவர்—பண்களைப்பற்றிய அறிவு இழந்த காலத்தவர்—பண்பாடும் முறை மறந்த காலத்தவர்—தாம்தாம் விரும்பிய புது இராகங்களில் பாடினார்கள். அந்த இராகங்களைப் பண்களுக்கு நேராகக் குறித்து வைத்தார்கள். ஒருவேளை சில முக்கிய பழைய பண்களுக்குரிய இராகங்களும் மரபாக வழிவழி ஆங்காங்கு பதிகங்களுக்குக் கிடைத்திருக்கலாம். எனவே ஓதுவார்கள் பதிகம் பாடுவதிலிருந்து பழைய பண்ணுக்குரிய இராகம் இதுதான் என்று எல்லாப் பதிகத்திற்கும் சொல்லிவிட முடியாது.

**பின்னர் பழைய பண்களைக் கண்டுபிடிக்க வழியுண்டா?**

சிலப்பதிகாரத்திலே—முல்லை, குறிஞ்சி மருதம், நெய்தல் எனும் நானிலத்திற்கும் உரிய பெரும் பண்களும் சிறு பண்களும் கூறப்பட்டுள்ளன. இவை தவிர நீரற்ற பாலை நிலத்திற்குரிய பண்களும் கூறப்பட்டுள்ளன. மேலும் செம்பாலையினின்றும் வலமுறை வழியாகவும் அரும்பாலையினின்றும் இடமுறை வழியாகவும் திரிந்து பிறக்கும் ஏழ் பெரும்பாலைகள் (பண்கள்) சிலப்பதிகாரத்தில் விரிவாகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. மேலும் பண்டைக் காலத்திலே பண்களை ஆக்கிய பலமுறைகளைப் பற்றிச் சிலப்பதிகாரம் கூறுகின்றது. பன்னிரு கோவை வீடுகளிலும் (சுரதானங்கள்) பன்னிருகால் மாறுமுதல் (கிரகபேதம்) பண்ணப் பன்னிரண்டு பண்கள் எய்தும் முறையும் கூறப்பட்டுள்ளன. மேலும் பெய்தல்முறை, தாரத்தாக்கமுறை அருகியல், பெருகியல், அகநிலை, புறநிலை ஆகிய நால்வகைச் சாதிப் பண்களாக்கல், பண், பண்ணியல், திறம், திறத்திறம் (சம்பூர்ணம், சாடவம், ஔடவம், சதுர்த்தம்) என்னும் திறப் பண்களாக்குதல்—முதலிய பல்வேறு வகைப் பண்ணாக்கும் முறைகள் மிகப் பண்டைய காலத்திலேயே தமிழகத்தில் தோன்றி வளர்ந்து வளமுற்றுத் திகழ்ந்தன. இவை உலகிலேயே தொன்மையான முறைகள்—கற்றுத் தெரிந்து கொள்ளுதற்குரிய முறைகள். இவற்றின் வழியாகப் பெரும்பாலான பழைய பண்கள் இவை இவை என்று அறிந்துகொள்ளலாம். இவ்வழியில் ஆராய்வதுதான் நெறியான, முறையான,

நிலையான, பயனுன நயனுன ஆராய்ச்சியாகும். இவ்வகை ஆராய்ச்சி நிலையங்கள், நிறுவனங்கள் தமிழ்ப் பல்கலைக் கழகங்களில் தோன்றுதல் வேண்டும். உலகிலேயே பண்ணுக்கும் பழம் முறைகள்—தமிழிலக்கியம் காட்டும் மிகத் தொன்மை முறைகள். பண்ணுக்கும் பழம் முறைகள்—தமிழகம் உலகுக்கு அளித்த மிகப் பெரும் செல்வம். தொன்மைக் காலத்திலே—உலகில் வேறு எம் மொழியிலும் இத்துணைவகைப் பண்ணுக்கும் பழமுறைகள் இருந்தனவா என்று ஆங்கில இசைப் பெருநூல் களைக் கறறுப்பார்த்த அளவில்—இருந்ததாகத் தெரியவில்லை. "உலக நாடுகளில் பண்ணுக்கும் முறைகள்" எனும் கட்டுரையை ஆராய்ந்து எழுதுதல் பயன்தரும் போதிய செய்திகள் கிட்ட வில்லை. கிட்டிய அளவில்—மிகமிகப் பிற்பட்ட காலத்தில்தான் "model shift of the tonic note" எனும் பண்ணுக்கு முறை மேலை நாடுகளில் தோன்றியுள்ளன. கிரேக்கம், சீன நாட்டில் பண்ணுக்கும் முறை உண்டு.

### இனி சாதாரிப் பண் என்பது பந்துவராளியா?

1950 ஆம் ஆண்டுச் சென்னைப் பண்ணுராய்ச்சிக் குழுவிலே—பண்ணுராய்ச்சி வித்தகர் ப. சுந்தரேசனுர் பாடிக் காட்டிய திலின்றும் பேராசிரியர் ப. சாம்பமூர்த்தியார் தலைமை விளக்கத் தைக் கொண்டு—ஓதுவார்கள் சாதாரி என்பது பந்துவராளி என்று முடிவுரைத்து—(பண்ணுராய்ச்சி நூல்-ப 9) வெளியிட்டுள்ளார்கள். ஓதுவார்கள் சாதாரிப் பதிகத்தைப் பந்துவராளியில் இடைக் காலத்திலோ பிற்காலத்திலோ பாடிவிட்டால் சாதாரி என்னும் பண்—பந்துவராளி ஆகிவிடாது. இன்று பாடுதுறை ஒன்றை வைத்துப் பழம் பண்ணை முடிவு செய்துவிட முடியாது. பலரும் பலவாறு ஒன்றைப் பாடுவதும் உண்டு; ஒரே மாதிரி பாடுவதும் உண்டு. ஒரே மாதிரி பாடினுலும் உரிய பண் இடைக்காலத்தில் மாறியிருக்கலாம்; இடைக்காலம் பண்மறந்த காலம்.

### சிலப்பதிகாரத்தில் சாதாரிப் பண்:

ஆயர்பாடியில் ஆய்ச்சியர்கள் கூடி, குரவைக்கூத்து ஆடிப் பாடிய பண் "முல்லையந்தீம்பாணி" என்று இளங்கோவடிகள் கூறிப் பண்ணையும் விளக்கி விரித்துரைத்துள்ளார். தமக்கு நிகரில்லாத் தமிழிசைப் பெரும் பேரறிஞராகிய அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரப் பதிக உரையில் முல்லைத் தீம்பாணியைச் "சாதாரி" என்று குறித்துள்ளார். எனவே முல்லைச் சிறு பண்ணே—"சாதாரி" எனும் பண். தமிழகத்தில் முல்லைப் பண்ணே—பழமைக்கும் பழமையான ஈடு இணையில்லாத

இன்சுவை மிக்க பண். இதற்குரிய இன்றையப் பண்—மோகனம் என்று கண்டு பிடித்துள்ளார் ஓரறிஞர். அதுவே பண்ணாய்வாளர்கள் ஏற்றற்குரியது. ஏனெனில் முல்லைத் தீம்பாணி என்பது "செந்நிலை மண்டிலத்தால்" என்னும் பாடலாலும், "குரல் மந்தமாக" எனும் வெண்பாவாலும் இளங்கோ வடிகள் பெரிதும் விளக்கியுள்ளார்கள். முல்லைப்பண்ணிற்குரிய சுவரங்கள் இவை என்றும் தெளிவுறுத்தியுள்ளார். முல்லைப் பாணியைச் சாதாரி என்று அடியார்க்கு நல்லார் குறித்துள்ளார். இவ் விரிவான விளக்கங்களினின்றும் சாதாரி என்பது மோகனம் எனத் தெளிவாய் அறியலாம்.

**முல்லைப் பண்ணை முன்னர் ஆராய்ந்தவர்கள் :**

"குரல் மந்தமாக" எனும் வெண்பாவால் முல்லைத் தீம்பாணியை இளங்கோ விளக்கியுள்ளார்கள். முல்லைப்பாணி என்பதை முதன்முதல் ஆய்ந்த மு. ஆபிரகாம் பண்டிதர் முல்லைப் பாணி என்பது சில சுரங்களின் அடுக்கு வரிசையாகக் காட்டியுள்ளார். (கருணாமிர்த சாகரம் பக். 691-693.) அதன் பின்னர் ஆய்ந்த விபுலாநந்த அடிகளார் முல்லைப் பாணியை—இணை, கிளை, பகை, நட்பு சுரங்களை விளக்கும் செய்யுளாகவே கொண்டார். (யாழ்நூல் ப. 131); முல்லையாழைச் செவ்வழி யாழாகவே கொண்டார் (பக். 175, 285, 161) செவ்வழி என்பது நெய்தல்யாழ். நெய்தல் நிலத்திற்குரியது. முல்லையாழ் என்பது முல்லை நிலத்திற்குரியது. இருவேறு நிலத்தின் வேறுபட்ட பண்களை விபுலாநந்தர் ஒன்ருக்கி உரைத்தது எக் காரணம் பற்றியோ? நாற்பெரும் பண்கள் இவைதாம் எனத் தெளிவது மிக அடிப்படையானது; பெரும் முரண்பாடுகள் உள்ளன. நாற்பெரும் பண்கள்பற்றி, ஆய்ந்து தெளிவு காணுதல் வேண்டும்.

**முல்லைப்பாணிபற்றி அறிவர் எசு. இராமநாதர் :**

முல்லைத்தீம்பாணி என்பது ஓர் திறப்பண் என முதன்முதல் ஆய்ந்து வெளியிட்டார்; இவர்தம் சிலப்பதிகாரத்து இசை நுணுக்கம் எனும் நூலில் விரிவாய் இதனை விளக்கியுள்ளார்.

(தொடரும்)

———

**இனிது வாழ்க!**

அகவை அறுபதாம் ஆண்டிலடி வைக்கும்
தகவார் கலைஞரவர் தங்கள்—அகமலர்ந்தே
குன்ருப் புகழ்பெருக்கிக் கோணல் பகையடக்கி
என்றென்றும் வாழ்க இனிது.

பாவலர் இடி முரசு.

# ‘துணைவினைகள்’

[புலவர் இரா. கிருட்டிணன் (இராகி.) பி. லிட்.]

(முன்னிதழ் ௪௦௬ஆம் பக்கத் தொடர்ச்சி)

மேலும்; ‘வினைப்படு தொகுதி...’ [15]‘நெறிபடுபொருள்...’ [16]‘விளியெனப்படுப...’ [17]‘சொல்லெனப் படுப...’ [18]‘பெயரெனப் படுபவை...’ [19]‘இடையெனப்படுப...’ [20]‘வெளிப்படு சொல்லே...’ [21]‘வழக் கெனப்படுவது...’ என்றெல்லாம் பல்வேறிடங்களிலும் ‘படு’ என்னும் துணைவினையையே தொல்காப்பியர் ஆண்டுள்ளார்.

திருவள்ளுவரோ, [22]...தெய்வத்துள் வைக்கப்படும்; [23]‘...போற்றி ஒழுகப்படும். [24]...திறந்தெரிந்து கூறப்படும். [25]...ஈண்டு முயலப்படும். [26]...வாய்மையால் காணப்படும். [27]...மேற்சென்று செய்யப்படும். [28]...இறையென்று வைக்கப் படும். [29]...திறம் தெரிந்து தேறப்படும். [30]...தன்மையான் ஆளப்படும். [31]...சுற்றத்தால் சுற்றப்படும். [32]...மனம்போல வேறுபடும். [33]...ஒல்லை யுணரப் படும். [34]குலத்தின்கண் ஐயப்படும். என்றெல்லாம் நூற்றுக்கு மேற்பட்ட இடங்களில் ஆண்டுள்ளார்.

பவணந்தியாரும் ‘பாடஞ் சொல்லும்’ இயல்பைக் கூறுமிடத்து,

[35]‘உரைக்கப் படு பொருள் உள்ளத் தமைத்து...’

என்று ‘படு’ என்னும் துணைவினையே ஆண்டுள்ளார்.

[36]‘மறைநவி லந்தணர் நுவலவும் படுமே’.
‘பதினென் கணனும் ஏத்தவும் படுமே’
[37]‘வலம்படு வாய்வாள் ஏந்தி...’
[38]‘அருங்கடிப் படுத்தனள் யாயே...’
[39]‘பகலாற்றுப் படுத்த பழங்கண் மாலை’
[40]‘அதர்படு பூழிய சேட்புலம் படரும்.’

---

15 முதல் 21 வரை, தொல்-சொல்-நச்சர். முறையே; 33, 104, 120, 190, 192, 251, 300.

22 முதல் 34 வரை, குறள். முறையே; 50, 154, 186, 265, 298, 335, 388, 501, 511, 525, 822, 826, 958.

35. நன்-பாயிரம்-86. 36. புறம். கடவுள் வாழ்-அடி:6, 10

37. புறம் : 91 38. அகம்: 150. அடி:6.

39. அகம்: 71. அடி:9. 40. அகம் : 390. அடி : 2.

என்று பல்வேறிடங்களிலும் படு என்பதனையே சங்கச் சான்றோர் ஆண்டுள்ள வழக்கையும் காணலாம்.

'படு' என்பது சிற்சில இடங்களில், 'அ' என்னும் வினையெச்ச விகுதி பெற்றுப் 'பட' என்றும், ஒற்று இரட்டித்துப் 'பட்ட' என்றும், 'அன்' சாரியை பெற்றுப் 'பட்டன' என்றும், 'இன்' உருபு பெற்றுப் 'படின்' என்றும் பல்வேறு வடிவங்களில் வருவதை, வழக்கை நோக்கின் நன்கு உணரலாம்.

[41]'எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்து. [42]உயிர் முதலாகிய மொழியும் உளப்பட... [43]தொழிற்படக் கிளத்தலும் வழக்கியல் மரபே. [44]வெளிப்பட வாரா உரிச்சொல் மேன. [45]எண்ணப்பட வேண்டாதார். [46]தேம்படப் பொதுளி...

[47]உளவெனப்பட்ட எல்லாச் சொல்லும். [48]மெய்த்தலைப் பட்ட வழக்கொடு சிவணி. [49]உள்ளப்பட்ட நகைநான் கென்ப. [50]சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே. [51]கல்லார்கண் பட்ட திரு. [52]மதியுடம் பட்ட மையணற் காளை. [53]மயங்கல் கூடா வழக்குவழி பட்டன. [54]மன்னவன் கோற்கீழ்ப் படின். ஆகியன சான்றோரின் சான்றுகளுள் சில.

ஆசூர் வடகரை நாட்டு வளத்தைக் கூறும் 'முக்கூடற் பள்ளு' ஆசிரியர் ஒரு பாடல் முழுவதும் 'படு' என்னும் துணை வினையை['பட்டு' என்னும் வடிவில்] ஆண்டுள்ளமையும் ஈண்டு நோக்கத்தக்கது.

[55]"கறை பட்டுள்ளது வெண்கலைத் திங்கள்
கடம் பட்டுள்ளது கம்பத்து வேழம்
சிறை பட்டுள்ளது விண்ணெழும் புள்ளு
திரி பட்டுள்ளது நெய்படுந் தீபம்.
குறை பட்டுள்ளது கம்மியர் அம்மி
குழை பட்டுள்ளது வல்லியங் கொம்பு
மறை பட்டுள்ளது அரும்பொருட் செய்யுள்
வளமை யாசூர் வடகரை நாடே."

---

41, 42. தொல் - எழுத். நச் - 102, 144.
43, 44. தொல்-சொல்-நச் - 248. 300.
45. குறள் : 922. 46. அகம் : 259.
47, 48. தொல் - எழுத் - நச் - 164, 171.
49, 50. தொல் - பொ - பேரா - 252, 257.
51. குறள் : 936. 52. அகம் : 221.
53. தொல் - சொல் - நச். 50.
54. குறள் : 558.
55. முக்கூடற் பள்ளு. பாடல் : 22.

'படு' என்னும் முதல்நிலை 'பாடு' என்று முதல் நீண்டு, முதல் நிலை திரிந்த தொழிற்பெயராக வருதலும் உண்டு. அவ்வாறு வருமிடங்களில் அவற்றைத் துணைவினையாகக் கொள்ளக் கூடாது.

'...கற்றார் அவைக்கு நிலை பாடு' குறள் : 409.
'...பட்டுப்பா டூன்றும் களிறு' ,, : 597.
'...படைத் தகையால் பாடு பெறும்' ,, : 768.

இம் மூன்றிடங்களிலும் 'பெருமை' என்னும் பொருளில் 'பாடு' வந்துள்ளதைப் பரிமேலழகர் உரையால் உணரலாம்.

'காடு' என்பது சொல்லாகவும் விகுதியாகவும் (வேக்காடு, நோக்காடு என்பனவற்றில் 'காடு' விகுதியாகும்) வருதல்போலப் 'பாடு' என்பது விகுதியாக வருதலும் உண்டு.

சான்றுகள்: விதைப்பாடு, கடப்பாடு, உடன்பாடு, கூப்பாடு, கோட்பாடு முதலியன.

எனவே, 'படு' என்பது சொல்லாகவும் வரும்; துணைவினையாகவும் வரும். பட, பட்ட, பட்டு, படின் என்றெல்லாம் வேறுபட்டும் வரும். "படு" முதல் நிலையாகும்போது 'பாடு' என்று முதல நிலை திரிந்த தொழிற்பெயராகவும் வரும். 'பாடு' என்பது தொழிற்பெயர் விகுதிகளுள் ஒன்றாகவும் வரும். இவையெல்லாம் கூர்ந்து நோக்கி, ஆய்ந்து அறியத்தக்கன.

'பெறு' என்பதும் சொல்லாகவும் துணைவினையாகவும் 'படு' என்பதைப் போலவே வரும். ஆனால் விகுதியாக வருவதில்லை. முதல்நிலையாகும்போது சிற்சில இடங்களில் முதல்நிலை திரிந்த தொழிற் பெயராகப் 'பேறு' என்றும் வரும். பெற, பெற்ற, பெற்று, பெறின் என்றெல்லாம் வேறுபாடடைதலும் உண்டு. இத் துணைவினை மிகவும் அரிதாகவே வழக்கில் ஆளப்பட்டுள்ளது.

[56]'நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்'. [57]'நிலை பெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்' என்பன தொல்காப்பியர் ஆட்சி.

பேராசிரியர் ஒருவரிடம் இவ்விரு துணைவினைகளைப்பற்றி ஒரு நாள் உரையாடுகின்றபோது, "உயர்திணைக்குப் 'பெறு' என்னும் துணைவினையும், அஃறிணைக்குப் 'படு' என்னும் துணைவினையும், ஏற்புடைத்து" என்றார். ஆனால், இருவகை வழக்கையும் (உலக வழக்கு, செய்யுள் வழக்கு) உற்று நோக்குகின்றபோது ஏற்ற சான்றுகள் 'இல்லை' என்றே தோன்றுகின்றன.

56. தொல் - சொல் - ௲ - 25.
57. ,, ,, ,, - 28.

[58]"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்"

இக் குறட்பாவில் கூறப்படும் மனிதனும் தெய்வமும் உயர்திணை யன்றோ? ஆனால், திருவள்ளுவர்; 'வைக்கப் பெறும்' என்னாது, 'வைக்கப் படும்' என்றன்றோ கூறியுள்ளார்?

தொல்காப்பியரும் (மேலே),

'நிலைத்துத் தோன்றும் அந்நாற் சொல்லும்', என்னாது, 'நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்' என்று சொல்லாகிய அஃறிணைக்குப் 'பெறு' என்னும் துணைவினையை ஆண்டுள்ளதும் சிந்திக்கத்தக்கது.

[59]"வழங்கியல் மருங்கின் உணர்ந்தனர் ஒழுக்கல்
நன்மதி நாட்டத் தென்மனார் புலவர்"

என்றும்,

[60]"பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லி னாகும் என்மனார் புல ர்"

என்றும் கூறியுள்ள தொல்காப்பியனார் 'தொல் மரபை அறிந்து, ஆய்ந்து, ஏற்றவற்றை ஏற்றுப் போற்றல், நந்தம் சீரிளமைத் தமிழுக்குச் செய்யும் தொண்டாகும் என்பதை இனியேனும் நம்மவர் உணர்வாராக.

---

58. திருக்குறள் : 50.
59. தொல் - எழுத் - நச் - 483.
60. தொல் - சொல் - நச் : 158.

---

## ஓர் அடிக்குறிப்பு

"வள்ளுவர் கூறும் ஒற்று நெறி" என்னும் தலைப்பில் திரு. பி எல். சாமி அவர்கள் செந்தமிழ்ச் செல்வி சிலம்பு-௩௭, பரல்-௫-ல் எழுதியுள்ள கட்டுரையில் இடம்பெற வேண்டிய அடிக்குறிப்பொன்று கீழே தரப்பட்டுள்ளது. அன்பர்கள் இதனை மேற் கூறப்பட்ட கட்டுரையுடன் சேர்த்துக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்.

"இவ்வாறு மூன்று ஒற்றர்களை வைத்து ஒற்றறிதல் அண்மையில் மேலை நாட்டில் இருந்து வருகின்றது. இதைப் பற்றிச் சிறந்த புதின ஆசிரியர் ஒருவர் (Novelist) எழுதியுள்ள செய்தி ஈண்டுக் கவனிக்கத்தக்கது.

"His net work of spies was based on the Classic triad—the group of three, so that one agent knew only two others and could betray only those he knew—*Morris west—The Tower of Babel.*

# ஒற்றைக்கல் மந்து

[நா. எழில் மகிழ்நன்]

உதக மண்டலமென்றும், உதகை என்றும் அழைக்கப் பெற்று வருகின்ற ஊர் பண்டைக் காலத்தில் ஒற்றைக்கல் மந்து என்றழைக்கப்பெற்றது. இவ்வூர் நீலமலைப் (நீலகிரி) பகுதியைச் சார்ந்ததாகும். அங்குத் துடவர் (தோடர்) இனத்தாரே மிகுதியும் வாழ்ந்தனர். அவர்களுக்கு எருமை மாடுகள் வளர்ப்பதே பெருந்தொழில். அஃதே அவர்களின் பெருஞ் செல்வமாகக் கருதப்பெற்றது. அதனாற்றான், மாடு என்னுஞ் சொல் செல்வத்தைக் குறித்தது. 'மாடல்ல மற்றையவை' (குறள் 400) என்பதை நோக்குக.

எனவே, மாட்டினங்களில் அதிக எருமை மாடுகள் வைத்திருப்பவனே பெருஞ் செல்வனாவான். மாடுகள் ஒன்றுகூடுமிடம் மந்தை எனப்பட்டது. மந்தை என்ற தென் சொல், துடவர் மொழியில் 'மந்து' என்றழைக்கப்படுகின்றது.

மந்து என்ற சொல்லின் வேர் மூலம் மன்று(=அவை), கூட்டம் என்பதாகும். மன்று–மந்து—மந்தை. காலப் போக்கில் மன்று, அம் என்ற பின்னொட்டுப்பெற்று மன்றம் ஆனது. ஒப்பு நோக்க: குன்று—குன்றம். மன்று—மன்றம் என்ற ஊருக்கு நடுவாயுள்ள ஓரிடத்தைக் குறித்தது.

'மன்றமும் பொதியிலு கந்துடை நிலையினும்'
—திருமுருகா -226

'மன்றும் பொதியிலு மாமயில்சேர் தஞ்சை'
(தஞ்சைவா - இடந்தல - 1)

மேலும் மந்தை என்ற சொல் ஆநிரை, மாநிரை கூடுமிடத்தையும் குறித்தது. 'கன்று பயிர் குரல மன்றுநிரை புகுதரும்' (அகநா. 64) ஈண்டு, மன்று என்ற சொல் ஆக்கள் (பசுக்கள்) கட்டும் தொழுவத்தைக் குறித்தல் காண்க.

அடுத்து, தமிழில் 'ன்று' என வழங்கும் ஒலியானது கன்னடத்தில் 'ந்து' என வழங்கும். ஒப்பு நோக்க: ஒன்று—ஒந்து. நீலமலை வட்டாரம், கருநாடகப் பகுதிக்கு அணித்தே உள்ளமையின் கன்னட மொழிக் கலப்பேற்பட்டது இயல்பேயாம். ஆதலின், மன்று—மந்து ஆனது.

மாடுகள் குழுமுமிடத்தைக் குறிக்க ஊருக்கு நடுவிலோ அல்லது வெளியிலோ ஒரு பெருங்கல்லை நட்டு வைப்பது பண்டைய பழக்கம். அப் பகுதியே, ஆங்கிலர் வருகைக்கு முன்

ஒற்றைக்கல் மந்து என வழங்கிற்று. ஒற்றைக்கல் மந்து கால ஓட்டத்தில் ஒத்தைக்கல் மந்து (ஒப்பு நோக்க: கற்றை – கத்தை) ஆகி, பின்னர் நாட்டின் வழக்கிற்கேற்ப, ஒத்தக மந்து ஆனது. இஃது ஆங்கிலர்தம் பலுக்கலுக்கு (உச்சரிப்புக்கு) இயைந்து வராமையால் ஒட்டக மண்டு (ootacamund) எனத் திரித்தும், ஊட்டி (ooty) எனக் குறுக்கியும் வழங்கி வந்தனர்.

திருத்தமாகக் கூறுவதாக எண்ணி, நம்மவர்கள் உதக மண்டலம் என்றழைத்து வருகின்றனர். ஒட்டக மண்டு, ஒத்தக மண்டாகி (ஒ. நோ. படாகை—பதாகை)ப்பின் பேச்சின் விரைவு ஒலிக் குறிப்பிற் கிணங்க, உதக மண்டலம் ஆக்கிக்கொண்டனர். மண்டலம் என்பது தொகைச் சொல். மண் + தலம் = மண்டலம், மண்டலம் என்ற சொல் இடப் பகுதியைக் குறிக்கும். கொங்கு மண்டலம், தொண்டை மண்டலம் போன்ற தொன்மை வழக்குகளை நோக்குக.

எனவே, ஒற்றைக்கல் மந்து என்ற ஊரின் தொன்மைப் பெயர். பல்வேறுபட்ட பழக்க வழக்கங்களுடையவர்களின் பலுக்கலுக் கிணங்கி, இற்றைக்கு உதக மண்டலம் எனவும், அதைக் குறுக்கி உதகை எனவும் தமிழர்களே வழங்கி வருதல் மெத்தவும் வருந்தற்பாலது. உதக மண்டலம் என்பதனை உதறி விட்டு ஒற்றைக்கல் மந்து என்றும்; சுருக்கம் வேண்டின் ஒற்றகை என்றும் அழைக்கும் நாள் எந்நாளோ! அந் நாளே தமிழினத் திற்குப் பொன்னாளென்க.

---

## Duplicator—ஒரு விளக்கம்

Duplicator—படி பெருக்கி எனக் கூறப்பட்டது. இதனைப் "படி எடுப்பான்" எனலாம்.

Cyclostyle—"படி எடுப்புச் சுழல்" எனலாம் ('கைப்படி பெருக்கி' என்றது நேர் பொருள் தரவில்லை) Roneo—"மின்படி எடுப்பான்" Stencil—வரிவெட்டுத்தாள், Stencil Board—வெட்டுச் சட்டகம்; வரி வெட்டுத்தகடு.

இனி, கல்லினுள் வெட்டப்பட்டது 'கல்வெட்டு' என்று கூறுவதை ஒப்பு நோக்குக.

Duplicator என்னும் சொல்லில் படியைப் பெருக்குதல் எனும் கருத்தில்லை. படியை எடுத்தல் எனும் கருத்தே—புதுச் சொல்லாக்கத்தில் திகழுதல் வேண்டும்.

பேராசிரியர் வீ. ப. கா. சுந்தரம்,
மதுரை

# டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்கட்கு எடைக்கு எடை வெள்ளி ரூபாய் வழங்கும் விழா

நாட்டுப் பெருங்கவிஞர் சுப்பிரமணிய பாரதியாரின் நூற்றுண்டு விழாவினையொட்டி, டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்கள், பாரதியார் படைத்துள்ள இலக்கியங்களை, அவரது வரலாற்றுடன் ஒப்பிட்டுத் திங்களுக்கொன்றாக இருபது தொடர் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். அதற்காக அவரைப் பாராட்டு முகத்தான் 6—5—83ல் மயிலை இலக்கிய வட்டத்தின் சார்பில், பாரதிய வித்யா பவன் மண்டபத்தில் விழாவொன்று நடத்தப் பெற்றது.

சென்னை மாநிலக் கல்லூரிப் பேராசிரியரும் மயிலை இலக்கிய வட்டச் செயலாளருமான திரு. தி. வ. மெய்கண்டார் அனைவரையும் வரவேற்றுப் பேசினர். செய்தி, அறநிலையத் துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் விழாவின் தலைமை ஏற்று முன்னுரையாற்றினர். பின்னர்ப் "பாரதியார் பற்றி ம. பொ. சி. பேருரை" என்னும் நூலினை மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்கள் வெளியிட, அதனைச் சட்டமன்றப் பேரவைத் தலைவர் மாண்புமிகு க. இராசாராம் அவர்கள் பெற்றுக்கொண்டார்கள். கல்வி அமைச்சர் அவர்கள் டாக்டர் ம. பொ. சி. அவர்களுக்குப் பொன்னடை போர்த்திச் சிறப்பித்தார். தமிழரசுக் கிளைக் கழகங்களும், இலக்கிய அமைப்புகள் பலவும் திரு. ம. பொ. சி. அவர்கட்குச் சிறப்புகள் செய்தன.

அடுத்து ம. பொ. சி. அவர்கட்கு எடைக்கு எடை வெள்ளி நாணயம் வழங்கும் எடைபோடும் விழா நடைபெற்றது. செட்டி நாட்டரசர் டாக்டர் ராசா சர் முத்தையா செட்டியாரவர்களின் மகனர் டாக்டர் எம். ஏ. எம். இராமசாமி அவர்கள் தமது சொந்தப் பொறுப்பில் வெள்ளி உருபாக்களை அள்ளி அள்ளித் தராசுத் தட்டில் வைக்க ம. பொ. சி அவர்களின் எடைக்கு எடை சமன் ஆயிற்று. ஆனல் டாக்டர் எம். ஏ. எம். இராமசாமி அவர்கள் தமது சொந்தப் பொறுப்பில் மேலும் ரூபாய் பத்தாயிரம் வழங்கினர்.

பின்னர் ம. பொ. சி. அவர்களைப் பாராட்டி கே. ஆர். சீனிவாச ஐயங்கார், திருமதி சௌந்திரா கைலாசம், டாக்டர். ச. வே. சுப்பிரமணியம் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். ம. பொ.

சி.யின் சொற்பொழிவுகளைச் சிறப்பாக நடத்தி வைத்த பேராசிரியர் மெய்கண்டாருக்கும், அவர்தம் மனைவியார் திருமதி உமா அவர்கட்கும் திருமதி சௌந்திரா கைலாசம் புத்தாடைகளைப் பரிசாக வழங்கினார். இறுதியில் டாக்டர் ம. பொ. சி, அவர்கள் நன்றி தெரிவித்துப் பேசினார். ம. பொ. சி. வாழ்க! எனும் வாழ்த்தொலியுடன் விழா இனிது முடிந்தது.

---

## கலைஞர் கருணாநிதி அவர்களின் 60 ஆவது பிறந்தநாள் விழா

தி. மு. கழகத் தலைவர் கலைஞர் கருணாநிதி அவர்களின் 60 ஆவது பிறந்தநாள் விழா 3-6-83 அன்று தமிழகம் முழுவதும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. அன்று காலை 6-45 மணியளவில் அண்ணா சதுக்கத்தில் கலைஞர் அவர்கள் மலர்வளையம் வைத்துத் தம்முடைய தலைவருக்கு வணக்கம் தெரிவித்துக்கொண்டார். அப்போது விண்ணூர்தியிலிருந்து மலர் தூவப்பட்டது.

கழகப் பொதுச்செயலாளர் பேராசிரியர், துணைப் பொதுச் செயலாளர் நாஞ்சில் மனோகரன், புதுவை முதல்வர் டி. இராமச்சந்திரன் மற்றும் கழக முன்னணியினர் அனைவரும் கலைஞருடன் வந்திருந்தனர்.

பின்னர்க் கலைஞர் அவர்கள் பெரியார் நினைவிடத்திற்குச் சென்று பெரியார், மணியம்மை ஆகியோர்க்கு வணக்கம் தெரிவிக்கு முறையில் மலர்வளையம் வைத்தனர். பின்னர், தி. க. பொதுச்செயலாளர் திரு. வீரமணி அவர்கள் கலைஞர் அவர்கட்கும் கழக முன்னணியினர்க்கும் தேநீர் விருந்தளித்தார்.

அடுத்துக் கலைஞரவர்கள் கோபாலபுரத்திலிருக்கும் தமது இல்லத்திற்கு வந்தபோது, பேராசிரியர், நாஞ்சிலார், சாதிக்பாட்சா, ஆர்க்காடு வீராசாமி ஆகியோர் அவருக்கு மாலையணிவித்தனர். அதனைத் தொடர்ந்து தொண்டர்களும் தமிழகமெங்குமிருந்து வந்திருந்த பெருமக்களும் கலைஞருக்கு மாலையணிவித்தனர்.

சட்டப்பேரவைத் தலைவர் ராசாராம், நீதிபதி கோகுலகிருட்டிணன் ஆகியோர் தொலைபேசி மூலம் கலைஞர்க்குத் தமது வாழ்த்தினைத் தெரிவித்துக்கொண்டனர். கலைஞர் தம்மை வாழ்த்த வந்திருந்த அன்னையார் இராணி அம்மையார் அவர்கள் காலில் விழுந்து வணங்கி அவர்தம் வாழ்த்தினையும் பெற்றார்.

கலைஞர் கருணாநிதி அவர்கள் மேலும் பல்லாண்டுகள் நலமுடன் வாழ்ந்து தமிழக மக்களின் அரசியல் குமுகாயப் பொருளாதார விடுதலைக்கு உழைக்க வேண்டும் என்னும் எமது உளமார்ந்த வாழ்த்தினையும் தெரிவித்துக்கொள்ளுகிறோம். வாழ்க கலைஞர்!

# செய்திகளும் குறிப்புகளும்

## சென்னைக் குடிநீர்த் திட்டத் துவக்கவிழா

பல ஆண்டுகளாகத் தமிழகத்தை அச்சுறுத்திக்கொண்டிருக்கும் வறட்சி இந்த ஆண்டு அதன் புரட்சிக்கோலத்தைக் காட்டவே, எப்படியேனும் ஏதேனும் ஒரு திட்டத்தை வகுத்தாகவேண்டும் என்ற கட்டாயநிலையில் ஆந்திரநாட்டிலிருந்து கிருட்டிணா ஆற்றுநீரைக் கொணரத் தமிழக முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் ஆந்திரநாட்டு அரசுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தின் துவக்கவிழா 25-5-83இல் நேரு விளையாட்டரங்கில் மிக ஆரவாரத்துடன் நடைபெற்றது. மாண்புமிகு நிதியமைச்சர் இரா. நெடுஞ்செழியனவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். மேதகு ஆளுநர் எஸ்.எஸ். குரானா அவர்கள் தலைமை தாங்கினார். இந்தியத் தலைமை அமைச்சர் மாண்புமிகு இந்திராகாந்தி அவர்கள் திட்டங்களைத் துவக்கிவைத்துத் திட்டத்திற்கான முதல் தவணையாக ரூ. 30 கோடியைத் தமிழகத்தின் சார்பில் ஆந்திர முதல்வர் மாண்புமிகு என். டி. இராமராவ் அவர்களிடம் வழங்கினார்கள்.]

மைய அரசின் நீர்ப்பாசனத்துறை அமைச்சர் மாண்புமிகு ராம் நிவாஸ்மிர்தா, ஆந்திரநாட்டு முதல்வர் மாண்புமிகு என். டி. இராமராவ், கருநாடக முதல்வர் மாண்புமிகு இராமகிருட்டின எக்டே, மராட்டிய முதல்வர் மாண்புமிகு வசந்த் தாதா பாட்டீல், தமிழக முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர். தமிழக மின்துறை அமைச்சர் மாண்புமிகு ச. இராமச்சந்திரன் அவர்கள் நன்றி நவில விழா இனிது முடிவுற்றது.

## தென்காசியில் திருக்குறள் விழா

தென்காசி திருவள்ளுவர் கழகத்தின் 56ஆவது திருக்குறள் விழா 26-5-83 முதல் 29-5-83 முடியச் சீருஞ்சிறப்புமாக நடைபெற்றது. முதல்நாள் உயர்திரு. பூந்துறை தியாகராசன் அவர்கள் தலைமையில் கவிதாஞ்சலியும், உயர்திரு. டாக்டர் தமிழண்ணல் அவர்கள் தலைமையில் திருக்குறள் பேரவையும், இரண்டாம் நாள் உயர்திரு. சுகி. சிவம் அவர்கள் தலைமையில் சிறப்புரை, வழக்குரை மன்றம் முதலியனவும், மூன்றும்நாள், சிறப்புரையும், குன்றக்குடி அடிகளார் தலைமையில் பட்டிமண்டபமும், நான்காம் நாள், கல்லூரி, பள்ளி மாணவ மாணவியருக்குப் பரிசுப் போட்டியும் நடைபெற்றன. அன்று மாலை தவத்திரு ஊரன் அடிகள் தலைமையில் 'வள்ளுவர் வழங்கும் வழியில்' என்ற பொதுத் தலைப்பின்கீழ் அறிஞர் சிலர் பலபொருள் குறித்துச் சிறப்புரையாற்றினர். இறுதியில் நாடாளுமன்ற உறுப்பினர் திரு. வை. கோபால்சாமி எம்.ஏ., பி.எல்., அவர்கள் வாழ்த்துரை வழங்க விழா இனிது நிறைவுற்றது.

## தென்பாண்டிச் சிங்கம்' நூல் வெளியீட்டு விழா

கலைஞர் மு. கருணாநிதி அவர்கள், 'குங்குமம்' இதழில் தொடர்பாக எழுதிவந்த வரலாற்றுச் சிறப்புமிக்க 'தென்பாண்டிச் சிங்கம்' என்னும் புதினத்தின் வெளியீட்டு விழா, 19-5-83 மாலை மயிலை, ஏ.வி.எம். இராசேசுவரி திருமண மண்டபத்தில் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பேராசிரியர் அன்பழகன் அவர்கள் இந்நூலின் முதற்படியினை வெளியிட்டார்கள். அதனைச்

சட்டமன்றப் பேரவை உறுப்பினர் உ. சுப்பிரமணியன் அவர்கள் பெற்றுக்கொண்டார்கள். விழாவிற்கு வந்திருந்தோரை திரு. கா. பானையப்பன் வரவேற்று உரையாற்றினார். பேராசிரியர் சி. பால சுப்பிரமணியம், சாண்டில்யன், எஸ். எஸ். தென்னரசு, கவிஞர் க. மு. ஷெரீப், திருக்குறள் மணி திரு. க. சு. திருநாவுக்கரசு ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். இறுதியில் கலைஞர் அவர்கள் நன்றி நவில விழா இனிது நிறைவேறிற்று.

## தூத்துக்குடி துறைமுகத் தலைவர் திரு. கே. ஏ. சுந்தரம் ஐ.ஏ.எசு. வெளிநாட்டுப் பயணம்

ஹாலந்திலுள்ள நீர் மற்றும் சுற்றுப்புறப் பொறியியல் அனைத்து நாடுகள் நீர்வளம் (International Institute for Hydraultic and Environmental Engineering)

மே மாதம் 30ஆம் தேதி முதல் ஜூலை மாதம் 2ஆம் தேதிவரை துறை முக நிர்வாகவியல் (Port Management) பற்றி அனைத்துலகக் கருத்தரங்கு நடத்தவிருக்கிறது. இந்திய நாட்டின் சார்பாக இந்தியத் துறை முகங்களின் வகையாளராகத் தூத்துக்குடித் துறைமுகக் கழகத் தலைவர் திரு. கே. ஏ. சுந்தரம், ஐ.ஏ.எசு. அவர்கள் கருத்தரங்கில் கலந்துகொள்ள உள்ளார்கள். கருத்தரங்கில் துறைமுக ஆளுமைக் குழுக்கள், துறைமுக நிதி ஆளுமை, கப்பல் போக்குவரத்து, துறை முகத் தொழிலாளர் அமைப்புகள், ஆகியனபற்றிக் கலந்துரையாடல் நடைபெறும். தூத்துக்குடித் துறைமுகக் கழகத் தலைவர் இந்தியத் துறைமுகங்களின் அமைப்பும், செயலாற்றும் திறனும்பற்றிக் கட்டுரை கொடுக்க உள்ளார்கள். கருத்தரங்கில் கலந்துகொள்ளும் வகையாட்கள் யாவரையும் இங்கிலாந்து, பிரான்ஸ் ஆகிய நாடுகளிலுள்ள சிறந்த துறைமுகங்களுக்கு அழைத்துச் சென்று, அவை செயல்படும் விதத்தை யும் தெளிவாக்க உள்ளார்கள். அதோடுகூட உலகத்திலேயே மிகப் பெரிய துறைமுகமான ரோட்டர்டாம் துறைமுகத்தையும் பார்வை யிட்டு அதன் அமைப்புகளைப்பற்றி அறிந்துவர இருக்கிறார்கள். கருத் தரங்கின் பிறகு அமெரிக்க நாட்டிற்கும் சென்று அங்குள்ள சில துறைமுகங்களைப்பற்றியும் அறிந்துவர உள்ளார்கள்.

# மதிப்புரை

## Philosophical Heritage of the Tamils.

(தமிழரின் தத்துவ மரபுச் செல்வம்)

பதிப்பாசிரியர்: S. V. சுப்பிரமணியன், R. விஜயலட்சுமி. வெளியீடு: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை-600113. 1983. ரு. 22-00. பக்கங்கள் xiii + 400.

'தமிழர் பாரம்பரியம்' என்ற தொகுப்பில் இந்நூல் ஐந்தாவதாகும். இருபது ஆங்கிலக் கட்டுரைகளும் ஐந்து தமிழ்க் கட்டுரைகளும் இதனுள் அடக்கம். சிறப்புத் தொடக்கவுரை யொன்றையும் கொண்டுள்ளது. பேராசிரியர்களும் அறிஞர்களும் கட்டுரைகள் வழங்கியிருக்கின்றனர். பதினான்கு கட்டுரைகள் சைவ சித்தாந்தம் பற்றியும் சைவத்திருமுறைகள் பற்றியும் ஆராய்கின்றன.

சைவசித்தாந்தத்தில் முத்தி, அருதியான பதி, பசு, பாசம் தன்றுணர்வு என்பனபற்றி ஐந்து கட்டுரைகள் தெளிவாகச் சிறந்த முறையில் உள்ளன. உமாபதி சிவாசாரியரின் சித்தாந்த அஷ்டகம் முடிவில் சிவனுடையதே என்றுரைக்கின்றது ஒரு கட்டுரை. நம்முடைய அன்றாட வாழ்க்கையிலும் சைவசித்தாந்தக் கோட்பாடு பயனுள்ளது என்பது மற்றொரு கட்டுரையின் சாறு ஆகும். திருமந்திரம் வெளிக்காட்டும் சிவபக்தி என்னும் கட்டுரை சிவநாமத்தின் பெருமை பேசுகிறது. கடவுளை அடையும் நான்கு வழிகளான சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திரமார்க்கம், தாசமார்க்கம் என்பன ஒரு கட்டுரையின் உட்பொருள். இறைவன் திருவடிகளில் அடைக்கலம் பெறுவதே சாயுச்சியம். சங்கரரின் தத்துவத்தைச் சைவம் மாயாவாதம் என்று குறிப்பிடுகின்றது. 'அத்துவிதம்' என்பதுபற்றியும் சைவ சித்தாந்தம் கூறும்பொருள் உண்மைகள் சுருதிக்கு முரண் ஆகாமையால், மாயைபற்றி அது கூறும் கருத்தும் சுருதிக்கு மாறுபட்டது அன்றும். இது சுத்தாத்துவிதம் ஆகும். அருவம், உருவம், அருவுருவம் என்ற மூன்று நிலைகளிலும் இறைவன் உள்ளான். ஆணவம், கன்மம், மாயை எனப் பாசம் மூன்று வகைப்படும். செம்பின் ஒளியைக் களிம்பு மறைப்பதுபோல் ஆன்மாவின் உண்மை நிலையை ஆணவம் மறைக்கிறது. முன் குறிப்பிட்டவற்றையெல்லாம் சில கட்டுரைகள் விளக்குகின்றன.

வீரசைவம் பற்றிய கட்டுரையொன்றும் விசிட்டாத்துவிதம் பற்றிய கட்டுரையொன்றும் இந்நூலில் உள்ளன. வைணவத்தின் அடிப்படைகளான மூலமந்திரம், துவயம், சரமசுலோகம் என்பவை நம்மாழ்வாரின் அருளிச் செயல்களில் பொதியப்பட்டுள்ளன. இந்தியத் தத்துவம்பற்றி ஆராய்வோர் பரிபாடலை உற்றுநோக்குதல் இன்றியமையாதது என்று விளக்கம் தருகிறது ஒரு கட்டுரை. தமிழிலக்கியத்தில் பிற தத்துவங்களின் தாக்கம் பற்றியெல்லாம் குறிப்பாகத் தரிசனங்கள், சாங்கியம், வேசியம், ஜைனம்-கட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. சங்க இலக்கியத்தில் சமயமும் வேந்தும், நாட்டுப்புறப் பண்பாட்டில் சக்திவழிபாடு, இராமகிருஷ்ண இயக்கம், தொல்காப்பியரின் தெய்வக்கோட்பாடு, திரு.வி.க.வும் மார்க்சியமும் ஆகியவைபற்றிய கட்டுரைகளையும் இங்குக் காணலாம்.

தொடக்கச் சிறப்புரை இந்திய தத்துவத்தின் ஒரு மொழியிலுள்ள ஒரு கூறுபற்றி விளக்குகிறது. எழுத்துகளை உயிரென்றும் மெய்யென்றும் பிரித்துள்ள பாகுபாடே ஆன்மாக்களையும் பிறவற்றையும் உணர்த்தும் உண்மையாகும். மற்றெல்லா உயிர் எழுத்துகளைக் காட்டிலும் அகரத்துக்கே முதலிடம். கடவுளின் முதன்மையை அகரம் சுட்டுகிறது. டவும் ரவும் சொற்களுக்கு முதலில் வரா. ஆன்மாக்களும் அறிவென்றாலும் கடவுளுக்கு அவை ஒப்பாகா என்பதை அது குறிக்கிறது.

சிறந்த கட்டுரைகள் அறிஞர்கள் கைவண்ணம்பட்டு இந்நூலில் மிளிர்கின்றன. பிறமொழி பேசுபவரும் சைவசித்தாந்த ஆராய்ச்சியில் ஈடுபட இந்நூற் கட்டுரைகள் தூண்டும். பிற கட்டுரைகளும் அறிஞர்க்கும் ஆராய்ச்சி மாணவர்க்கும் விருந்தாகும். ஒரு குறையும் உண்டு. தமிழர் தத்துவம்பற்றி எழுந்த நூலில் இராமலிங்க சுவாமிகள்பற்றியும், தமிழ்ச் சித்தர்கள்பற்றியும் கட்டுரைகள் இடம் பெறாதது வருந்தத்தக்கதாகும். இன்னும் ஒன்றிரண்டைக் குறிப்பிடலாம்.

க. சி. கமலையா.

## என் நினைவுகளில் பாவேந்தர்

[ஆசிரியர்: த. கோவேந்தன், பூக்கூடை பதிப்பகம், சென்னை-600003, விலை ரூ. 10-00]

பெருமக்களின் வரலாறுகள் பலவகைப்படும். தன் வரலாறு, பிறரால் தொகுக்கப்படும் வரலாறு, அவர்களோடு நெருங்கிப் பழகியோர் தம் பட்டறிவால் கூறும் வரலாறு எனப்படும். இவற்றுள் அவரோடு பழகியோர் கூறும் வரலாற்று முறைதான் படிப்பதற்குச் சுவையூட்டுவதாகும். அவ்வகையில் பாவேந்தரைப்பற்றி, திரு. கோவேந்தன் அவர்கள் எழுதியிருக்கும் 'என் நினைவில் பாவேந்தர்' என்னும் இந்நூல், படிப்போரின் உள்ளத்தைத்தொட்டுப் பாவேந்தரை நன்கு புரிந்துகொள்ளுதற்கு ஏற்றவகையில் அமைந்துள்ளது. பாவேந்தரின் அஞ்சாநெஞ்சம், தமக்குச் சரியெனப்பட்டதைத் துணிவுடன் கூறும் அவரது நேர்மை, உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத பெற்றிமை ஆகியவற்றை, அவரோடு பழகிப் பெற்ற பட்டறிவால் நினைவுகூர்ந்து தொகுத்துரைக்கும் இந்நூலாசிரியரின் நினைவாற்றலும் எழுத்தாற்றலும் பெரிதும் பாராட்டத்தக்கவை.

பாவேந்தரைப்பற்றி இவர்கூறும் செய்திகள் சில நம்மைச் சிந்திக்க வைக்கின்றன—சில புரட்சி உணர்வையூட்டுகின்றன—சில பகுத்தறிவுக்கு விருந்தளிக்கின்றன—சில நகைச்சுவையூட்டுகின்றன. மற்றுஞ்சில நிகழ்ச்சிகள் இப் பேரறிஞர்பட்ட பொருள்முட்டுப்பாட்டினையும் வறுமையினையும் எண்ணி நம்மைக் கண்கலங்க வைக்கின்றன. விரிக்கின் பெருகும். சுருங்கச் சொல்ல வேண்டுமானால் இளைஞர்கள் இந்நூலினைப் படித்துப் பலதுறைப் பட்டறிவினைப் பெறவாய்ப்பளிக்கிறது எனலாம். படித்துப்பாருங்கள்.

## குறள் தரும் ஆத்திசூடி

[ஆசிரியர்: டாக்டர் கு. மோகனராசு (கவிஞர் மு. எழிலரசு) வள்ளுவர் கழகம், சென்னை. விலை: ரூ. 2-50.]

ஔவையார் இயற்றிய ஆத்திசூடிக்குப் பின், அதனைப் பின்பற்றி பாரதியார், பாரதிதாசன் போன்றோர் பல்வகை ஆத்திசூடிகளைத் தத்தம் கருத்துக்கேற்ப உருவாக்கினர். அவ்வகையில் டாக்டர் மோகனராசு அவர்களும் 'குறள்தரும் ஆத்திசூடி' எனத் திருக்குறளில் வரும் சொற்றொடர்களைக் கொண்டே அகரவரிசையில் தொகுத்துள்ளார். இங்ஙனம் வள்ளுவத்தை எளிமையாக்கி வழங்கியிருக்கும் ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

## கலைந்த கனவு (சூர்ப்பணகை—ஒருதிறனாய்வு)

[ஆசிரியர்: வி. சா. பாலசுப்பிரமணியன், எம்.ஏ., பி.ஓ.எல். பி. இடி. (எம.பில்.) மீனாட்சி நூல் வெளியீட்டு நிலையம் 60. செ. கோயில் தெரு ராஜப்பா நகர், தஞ்சாவூர்-613007. விலை: ரூ. 10.00.]

இராவணனின் தங்கை சூர்ப்பணகை இராமனை அடைய விரும்பினள். ஆனால் அவள் எண்ணம் கைகூடவில்லை. அதனால் ஏமாற்றமும் துயரமுமுற்ற அவள், இராமனை அடைய மேற்கொள்ளும் தவறுான முறைகளைக் கம்பர் சுவைபடச் சித்திரித்துள்ளார். அதையே அடிப்படையாக வைத்துச் சூர்ப்பணகையைப்பற்றித் திறனாய்வு செய்கிறார் இந்நூலாசிரியர். சுவைமிக்க ஆராய்ச்சி. படிக்கவேண்டிய நூல்.

### விடியல் கீதம்

[ஆசிரியர்: இளங்கலைடனி; பர்வாறு இல்லம், 13, மடிப் பாக்கம், கூட்டுச்சாலை, கருணாநிதிபுரம், சென்னை-91. விலை: ரூ. 5-00.]

பொதுவுடைமைக் கருத்துக்களை இனிய எளிய புதுக்கவிதைகள் மூலம், மக்களுக்கு உணர்த்த விரும்பிய இந்நூலாசிரியர், பல துறைகளையும் தொட்டுவிட்டுத் தலைவர்களைப் பற்றிக் கூறும்போது பெரியார் பாரதிதாசன் போன்றவர்களைப்பற்றிக் கூறும் கருத்துக்கள் முற் போக்குக் கருத்துடைய நல்லவர்களின் சிந்தனைக்குரியவை.

### ஒளிந்திருப்பேன் உன் அடிச்சுவட்டில்

[ஆசிரியர்: தங்க வைடாபுரி, எம்.ஏ., பி எட். சாரதா பதிப்பகம் 8, யாதவன் தெரு, கோட்டூர், சென்னை-85. விலை: ரூ. 9-00.]

இஃதொரு கவிதை தொகுப்பு நூல். கவிதை நூல்களைப் படிப் போர் குறைவு என்பதாலோ என்னவோ, இதன் பிற்சேர்க்கையாக, இந் நூலாசிரியரின் துணைவியார் திருமதி சாரதா அவர்கள் இயற்றிய குறு நாவல் ஒன்றினையும் இணைத்து வெளியிட்டுள்ள இவ்வாசிரியரின் உத்தி பாராட்டத்தக்கது. கவிதைகள் மரபு வழுவாத கவிதைகளாகவும், கருத் துடையவையாகவும் இருக்கின்றன. "இனி வரவே மாட்டாரா?" என்னும் பின்னிணைப்புக் கதை அனைவரும் படித்துச் சுவைக்கும் வகை யில் அமைந்துள்ளது.

### வாழ்வில் வெற்றியடைய வழிகள்

[ஆசிரியர்: சோதிடக் கலைஞர், மாரியப்பர் அடிகள், வசந்தவல்லி பப்ளிஷிங் ஏஜென்சி, 16, காளிங்கராசன் முதல் தெரு, சிமெட்டரி சாலை, சென்னை-21. விலை: ரூ. 25-00.]

கோள்நிலை, எண்ணியல், கைரேகை, மருத்துவம், ஆன்மீகம் ஆகிய வற்றை எளிதில் அறிந்துகொள்ளவும், பிறர் உதவியின்றிச் சாதகம் கணிக்கவும், பெயர் மாற்றங்கள் செய்துகொள்ளவும், உடல்நலக் குறை விற்கு மருத்துவம் செய்துகொள்ளவும் வழிகாட்டும் பல அரிய பெரிய செய்திகள் அடங்கியது இந்நூல்.

———

### மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-௫௭, பரல் ௬, ௪௨௰ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப். அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10-00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5-00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5-00 |
| ,, | விசாகநம்பி அவர்கள் சென்னை | 5-00 |
| ,, | சயப்பாக்கம் முத்துலிங்க செட்டியார் அவர்கள் சென்னை-10 | 5-00 |

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.

## கழக நிலையங்களில் கிடைக்கும்
## பிற பதிப்பாளர்களின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| தடாதகைப் பிராட்டி—எஸ். குலசேகரன் | 7 | 00 |
| கடல் வாணிகமும் தரை வாணிகமும் —புலவர் மு. த. வேலாயுதம் | 10 | 00 |
| இலக்கிய ஆய்வு—பி. எல். சாமி, ஐ.ஏ.எசு. | 17 | 00 |
| ஊதுகிறேன் சங்கு—அரிமா தென்னகன் | 10 | 00 |
| என் நினைவுகளில் பாவேந்தர்—கோவேந்தன் | 10 | 00 |
| பாரதியும் பாரதிதாசனும்—சா. ஜெசரட்சகன் | 12 | 50 |
| அலைகள் ஓய்வதில்லை—தாமரை செந்தூர்ப் பாண்டி | 7 | 00 |
| மோக தரிசனம்—பிரதிபா ராஜ கோபாலன் | 7 | 00 |
| எழுபதுகளில் கலை இலக்கியம்—லட்சுமி சுந்தரம் | 12 | 00 |
| புள்ளியில் மலர்ந்த பூக்கள்—N. R. தாசன் | 5 | 00 |
| காலத்திற்கு ஒருநாள் முந்தி—தமிழன்பன் | 4 | 50 |
| கன்னி விதவையின் கதை—பேரறிஞர் அண்ணா | 5 | 90 |
| சிறகு முளைக்காத ஒரு பறவை—டி. எஸ், ரவீந்திரதாஸ் | 7 | 50 |
| நல்ல குடும்பம் ஒரு பல்கலைக் கழகம்—மெர்வின் | 7 | 50 |
| எதிர் நீச்சல்—கடலூர் மணிமாறன் | 5 | 00 |
| முகைதின் புராணம் I—மு. அப்துல் கரீம் | 27 | 50 |
| உள்ளதைச் சொல்லுகிறேன் | 10 | 00 |
| நூருண்டு கண்ட பாரதி—எழிலமுதன் | 7 | 00 |
| பாரதி ஒரு பார்வை—வலம்புரி ஜான் | 20 | 00 |
| தமிழ்நாட்டு வரலாறு—இறையரசன், எம் ஏ. | 14 | 50 |
| தமிழ்மொழியும் அதன் சீரழிப்பாளர்களும் —புலவர் ந. கி. நல்லப்பன் | 9 | 50 |
| இன்பமாக வாழ்வது எப்படி?—சுவாமி சச்சிதானந்தர் | 15 | 00 |
| நர்மதா நளபாக சமையல்—திருமதி இராஜம் அனந்தராமன் | 9 | 00 |
| தியாகச் சுடர்—பி. எஸ். ஆர். ராவ் | 13 | 00 |
| துப்பறியும் துக்காராம்—பொன் பரமகுரு | 6 | 90 |
| நான் விமர்சிக்கிறேன்—வலம்புரிஜான் | 4 | 00 |
| கஸ்தூரிபா கதைகள்—கே. எஸ். ஜம்புநாதன் | 7 | 50 |
| கவிராஜன் கதை கவிஞர் வைரமுத்து | 14 | 00 |
| நான் விமர்சிக்கிறேன்—வலம்புரிஜான் | 4 | 00 |
| காதல் கடிதங்கள்— ,, | 4 | 00 |
| தாகங்கள்— ,, | 4 | 00 |
| தமிழர் எண்ணங்கள்—க. கார்த்தி | 16 | 00 |
| Cenima as Medium of Communication in Tamil nadu —C. R. W. David | 15 | 00 |

———

அப்பர் அச்சகம், சென்னை-108.